# கிட்கிந்தா காண்டம்

## முகவுரை

ஆரணிய காண்ட முன்னுரையிற் கூறியவாறு திருப்பனந்தாள் மடத்துத் தலைவரவர்கள் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சாமிநாத தம்பிரான் சுவாமிகள் அருளிய பொருளுதவி கொண்டு இந்தக் காண்டம் அச்சிடப்பெற்றது; சுந்தர காண்டம் அச்சாகிவருகின்றது. யுத்த காண்டம் செந்தமிழ்ப் பத்திரிகையில் வெளியாகி வருகின்றது.

வெள்ளகால் போஸ்டு,
திருநெல்வேலி ஜில்லா.

வெ. ப. சுப்பிரமணிய முதலியார்.

# கம்பராமாயண சாரம்

## கிட்கிந்தா காண்டம்

# கம்பராமாயண சாரம்

# கிட்கிந்தா காண்டம்

[ கிட்கிந்தை யென்னும் வானர ராசதானிநகர் சம்பந்தமான வரலாற்றைக் கூறுவது ]

## 1. பம்பைப் படலம்

[ பம்பை என்னும் பொய்கையைப்* பற்றிக் கூறுவது ]

### கடவுள் வாழ்த்து

1. மூன்றுரு வெனக்குண மும்மை யாமுதல்
தோன்றுரு வெவையுமம் முதலைச் சொல்லுதற்
கேன்றுரு வமைந்தவு மிடையி னின்றவன்
சான்றுரு வுணர்வினுக் குணர்வ தாயினான்

கொண்டுகூட்டு† : *மூன்று உரு (- நிறம்) என, குணம் மும்மை ஆக, முதல் தோன்று உரு ( - தத்துவம்) எவையும், அம் முதலைச் சொல்லு தற்கு ஏன்றவையாய், உரு ( - வடிவு) அமைந்த (யா)வும் (தன்) இடையில் நின்றவனும் சான்றும் ஆனவன், உரு [- உடம்பு(ள் உயிரின்)] உணர்வுக்கு உணர்வு ஆயினான்.*

பொருள் : *(முறையே வெண்மை, செம்மை, கருமை யென்னும் நிறங்களுடைய சாத்துவிகம், ராசதம், தாமதம் என்ற முக் குணங்களையுடைய மூலப்பிரகிருதியும், அந்த) மூன்று நிறங்கள் உடையன என்று சொல்லும்படி, அந்த முக்குண அமிசங்களாக மூலப்பிரகிருதியினின்று தோன்றிய தத்துவங்கள் யாவும், அந்த மூலப்பிரகிருதியை (விவரிக்குமுகமாக, அதுவும் அதனினின்று தோன்றிய மற்றைத் தத்துவங்களும் இவ்வாறு பரிணமித்திருக் கின்றன வென்று) எடுத்துச் சொல்லுதற்குப் பொருத்தமானவை யாய், (புடைபெயர்வனவும் நிற்பனவுமான சராசரங்க ளென்றும்*

---

* பொய்கை - ஒருவராலும் உண்டுபண்ணப்படாமல் இயற்கையாக உண்டான ஏரி.
† *அந்துவயம் - உரைமுறை - வசன நடை* (Prose order).

உணர்வுடையனவும் இல்லனவுமான சேதநாசேதனங்க ளென்றும்) வடிவம் அமைந்தன(வான பிரபஞ்சங்கள் யா)வும், தன் (விராட்புருட மேனியின்) இடத்தே நிற்கப்பெற்றவனும், (சர்வாந்தரியாமியாய் உயிர்கள் செய்யும் கருமங்க ளெல்லாவற்றையும் தவறாது காண்கின்ற) சாட்சியும் ஆன இறைவன், உடம்பின்(கண் உள்ள உயிரின்) உணர்வுக்கு உணர்வானவன்.

மூன்று உரு - மூன்று நிறம். மும்மை - மூன்று*. 'முதல் என்னும் பண்புப்பெயர் ஆகுபெயராய் முதன்மையான மூலப்பிரகிருதியை யுணர்த்திற்று.'—வை. மு. கோ.

மூலப்பிரகிருதி, முதல் தத்துவமா யிருத்தல்பற்றி இந்தக் கவியில் 'முதல்' எனப்பட்டது போலத், தத்துவப்பிரகாச மென்ற நூலில் 'பூதங்க டனிற்றோன்றும்' என்ற கவியில் 'மூலம்' எனச் சுருக்கிக் கூறப்பட்டிருத்தல் காண்க.

இடை - இடம். சான்று - சாட்சி; வாலிவதைப்படலம் களஎ-ம் பாட்டில் 'யார்க்கும் சான்றென நின்ற வீரன்' என வருதல் காண்க. உணர்வது என்பதில் 'அது' பகுதிப்பொருள் விகுதி.

முதலாம் உரு நிறங்களையும், இரண்டாம் உரு அந்நிறங்கள் மூன்றுடைய முக்குணமிசங்களான தத்துவங்களையும், மூன்றாம் உரு அத் தத்துவங்களா லமைந்த பிரபஞ்சங்களையும், நான்காம் உரு அப் பிரபஞ்சங்களில் உள்ள உடம்புகளையும் உணர்த்திநிற்றல் காண்க.

நான்காம் உருவை 'உணர்வினுக்கு' என்பதோடு சேர்க்காமல் 'சான்று' என்பதனோடு இயல்பாகச் சேர்ந்து நிற்கிறபடியே கொண்டு 'சான்றுரு' என்பதற்குச் 'சாக்ஷிரூபம்' என்று பொருள்கொள்ளலு மாம்.

'இடையில் நின்றவன்' என்றதனால் இறைவன் சர்வப் பிரபஞ்சங்களுக்கும் தங்கும் இடமானவனாய், அவை அனைத்துக்கும் ஆதாரமானவ னென்பது குறிக்கப்பட்டது.

'முதற் றோன்றுரு எவையும் அம் முதலைச் சொல்லுதற் கேன்றுரு அமைந்தவும் இடையில் நின்றவன், மூன்றுரு என ஆயினான்; குணம் மும்மையா ஆயினான்; சான்று ஆயினான்; உணர்வுக்கு உணர்வது ஆயினான்' எனக் கொண்டுகூட்டித் தத்துவங்களும் பிரபஞ்சங்களும் (ஆதேய† மாய்த் தன்னை ஆதாரமாகக்‡ கொண்டு) தன்னிடத்தே நிற்கும் இறைவன்

* குறள் உ௯ உரை. † ஆதேயம் - தாங்கப்படுவது. ‡ ஆதாரம் - தாங்குவது.

(நிறம், வெண்மை செம்மை கருமை யென) மூன்று நிறமாகவும், (குணம், சாத்துவிதம் ராசதம் தாமதமென) மூன்று குணமாகவும், (எனவே, அந் நிறங்களும் அக்குணங்களுமுடைய திரிமூர்த்திகளாகவும்) சாட்சியாகவும், உணர்வுக் குணர்வாகவும் ஆனவன் என்றும் பொருள் கூறலாம்.

'இடையினின்றவும் சான்றுரு' என்ற பாடங்கொண்டு அதற்கு 'அப் பிரபஞ்சத்தி னிடையே புகுந்து நின்ற ஜீவன்களும் (தனக்குச்) சிறந்த சரீர மாகக்கொண்ட பரப்பிரஹ்மமாம்' என்பது முந்திய உரை.—வை. மு. கோ.*

'சான்றுரு உணர்வினுக் குணர்வ தாயினன்' என்ற ஈற்றடியில் **சான்று** என்பதற்கு 'உணர்வ தாயினன்' என்பதில் உள்ள **தாயினன்** என்பது மோனையாகக் கொள்ளப்பட்டிருத்தல் காண்க. அப்படிக் கொள்ளுங்கால் 'உணர்வதாயினன்' என்பதைச் சந்தி பிரித்து 'உணர்வது ஆயினன்' என்னா மல் சந்திபிரியாமல் 'உணர்வதாயினன்' என உச்சரிக்கப்படுதல் கவனிக்கத் தக்கது. இது போலி மோனை. 'சான்றுரு உணர்வினுக்குலகம் தாயினன்' என்ற பாடத்தில் உள்ள 'தாயினன்' உண்மை மோனை.

கட்புலனாகாத சாத்துவிக முதலிய குணங்கள் நிறமுடையன வென்றது, கட்புலனாகாத புகழை வெண்மை யென்பதும் கோபத்தைச் செம்மை யென்பதும் போலும்.

அயோத்தியா காண்டக் கடவுள் வாழ்த்தில் 'ஊனும் உயிரும் உணர் வும்' என்றவற்றில் 'ஊன்' என்ற உடம்பு இங்கே 'உரு' என்பதனால் உணர்த் தப்பட்டது. செய்யுளில் 'உருஉணர்வு' என்றதனால், உரையில் மேற்கூறிய 'ஊனும் உயிரும் உணர்வும்' என்ற மூன்றனுள் இடையில் நின்ற 'உயிர்' உபலக்கணத்தால் வருவிக்கப்பட்டுப் பொருள் கூறப்பட்டிருத்தல் காண்க.

உடம்புக்கு உயிர்போலவும், உயிர்க்கு உணர்வுபோலவும், உணர்வுக்கு இறைவன் உளனென்பது 'உணர்வினுக்குணர்வதாயினன்' என்பதன் கருத்து.

'மூன்றுரு எனக் குண மும்மையா முதற் றோன்றுரு எவையும்' என்றது தத்துவங்களை. அவை வருமாறு:—

தன்னுள் அடங்கியிருந்த சாத்துவிதம் ராசதம் தாமதம் என்ற மூல குணங்கள் மூன்றும் வெளிப்பட்டுத் தோன்றித் தம்மிற் சமமாய் நின்ற அவதரத்தில் உள்ள 'மூலப்பிரகிருதி' என்னும்†

* இந்நூலில் இடம் விளக்காத மேற்கோள்கள் பெரும்பாலும் ஸ்ரீ. வை. மு. கோ. அவர்களுடைய உரையிலுள்ளவை.

† முக்குணங்களடங்கிய மூலப்பிரகிருதி, எழுநிறங்களடங்கிய ஒளிபோலும். முக்குணங்கள் வெளிப்பட்டுத் தோன்றும் மூலப்பிரகிருதி, [முக்கோணக் கண்ணடி (Prism)யினுட் புகுந்து] எழு நிறங்கள் வெளிப்படத் தோன்றும் ஒளிபோலும். (எழு நிறங்கள், வானவில்லிற் காணப்படும் நிறங்கள்.)

குணம் 1

அதனினின்று தோன்றிச் சாத்துவிதகுணம் மிகுந்து விளங்கும் 'மான்' என்னும்

புத்தி 1

அதனினின்று தோன்றி ராசதம் மிகுந்து விளங்கும்

அகங்காரம் 1

சாத்துவித குணமிசமான தைசத அகங்காரத்தினின்று தோன்றும் மனம் ... ... ... ... 1

சுரோத்திரம் துவக்கு சட்சு சிங்குவை ஆக்கிராணம் என்னும் ஞானேந்திரியங்கள் ... ... ... 5

ராசதகுணமிசமான வைகாரி அகங்காரத்தினின்று தோன்றும் வாக்கு பாதம் பாணி பாயுரு உபத்தம் என்னும் கன்மேந்திரியங்கள் ... ... ... ... 5

தாமதகுணமிசமான பூதாதி அகங்காரத்தினின்று தோன்றும்

சத்தம் பரிசம் ரூபம் ரசம் கந்தம் என்னும் தன்மாத்திரைகள் 5

ஆகாயம் வாயு தேயு அப்பு பிருதிவி என்னும் பூதங்கள் ... 5

ஆகத் தத்துவங்கள் ... 24

இந்த இருபத்துநான்கு தத்துவங்களும் ஆன்ம தத்துவ மெனப்படும்.

தத்துவங்கள் சூக்குமமாய்த் தேகத்தின் அகத்தேயுள்ளன. தன் மாத்திரையான சத்தம், பரிசம், ரூபம், ரசம், கந்தம் என்பவை வேறு: சாதாரணமாகச் சத்தம், பரிசம், ரூபம், ரசம், கந்தம் என்று கூறுபவை வேறு. முந்திய சத்தம், தேகத்தின் அகத்தேயுள்ளதாய்ப் புறத்தேயுள்ளதும் பூதகுணமானதுமான சத்தத்தை அறியுங் கருவி. பிந்திய சத்தம், வெளியேயுள்ள கேட்கப்படுகின்ற ஓசை. முந்திய சத்தத்தினின்று ஆகாயமாகிய பூதம் தோன்றும். பிந்திய சத்தம் அவ் ஆகாய பூதத்தின் குணம். எஞ்சிய பரிச முதலியவைகளும் இப்படி இருவகைப்பட்டனவே. சுரோத்திர முதலிய ஞானேந்திரியங்களைந்தும், வாக்கு முதலிய கன்மேந்திரியங்களைந்தும், பிருதிவி முதலிய பூதங்களைந்தும், தன் மாத்திரையான சத்தாதிகள் போலத் தேகத்தின் அகத்தேயுள்ளன. தத்துவங்களனைத்தும், தேகத்தின் அகத்தே யுண்மையால், அகக்கருவிக ளெனப்படுதல் காண்க.

தத்துவங்களின் திறத்திற் பல மதத்தினர்களின் கொள்கைகளும் ஒன்றுக்கொன்று பேதமுடையன. அப் பேதங்கள் அவ்வம் மதநூல் கொண்டு தெரிதற்பாலன.

மேலே விரித்து விவரித்துக் கூறிய அசித்தான* இருபத்துநான்கு தத்துவங்களோடு, சித்தான† ஆன்மாக்களின் தொகுதியைப் புருட தத்துவம் என்று பெயரிட்டுச் சேர்த்துத் தத்துவங்கள் இருபத்தைந் தென்று சாங்கிய நூல் கூறும்.

ஆன்மதத்துவம் இருபத்துநான்குடன் அவற்றுக்கு மேலாக மாயை, காலம், நியதி, கலை, வித்தை, அராகம், புருடன் என்ற வித்தியா தத்துவம் ஏழும், அவற்றுக்கு மேலாக நாதம், விந்து, சாதாக்கியம், ஈச்சுரம், சுத்த வித்தை என்னும் சிவ தத்துவங்கள் ஐந்தும் கூட்டித் தத்துவங்கள் முப்பத்தா றென்றும், வித்தியா தத்துவங்களில் உள்ள கலையினின்று மூலப்பிரகிருதி தோன்றுமென்றும், புருட தத்துவம் சித்தைச் சார்ந்து சித்தின் வண்ணமா யும் அசித்தைச் சார்ந்து அசித்தின் வண்ணமாயும் நிற்குந்தன்மைய தாதலால் சித்தசித்து அல்லது சிதசித்து எனப்படு மென்றும், தத்துவம் முப்பத்தாறும் பாசம் என்பதனு ளடங்குமென்றும், சாங்கிய புருட தத்துவத்தி லடங்கிய ஆன்மாக்களைப் பசு என்றும், ஆன்மாக்களுக்கு வேருக ஈசுரனில்லை யென்ற சாங்கியமதத்தை மறுத்து உண்டு என நிறுத்தி ஈசுரனுகிய பதியும் மேற் கூறிய பசு பாசங்களுமாகிய (உயிர் கடவுள் உலகம் என்னும்) பசு பதி பாசம் என்ற முப்பொருள்கள் உண்டு என்றும், அவை மூன்றும் அநாதி நித்தப் பொருள்களென்றும் சைவசமய நூல்கள் கூறும். பசு பதி பாசம் என்ற இம் முப்பொருள்களை முறையே ஜீவேச்வரஜகத் என வைணவமதக் கிரந்தங்கள் வழங்கும்.

உடம்பின்(கண் உள்ள உயிரின்) உணர்வு எனப் பொருள்படும் 'உருஉணர்வு' என்றதனுல் ஜீவனும், 'இடையில் நின்றவன்' 'சான்று' 'உணர்வதாயினன்' என்றதனுல் ஈச்வரனும், 'மூன்றுரு எனக்குண மும் மையாமுதல் தோன்றுரு எவையும் அம்முதலைச் சொல்லுதற் கேன்றுரு அமைந்தவும்' என்றதனுல் ஜகத்தும் ஆகிய ஜீவேச்வரஜகத் என்ற முப் பொருள்களும் இந்தக் கடவுள்வாழ்த்துக் கவியில் அமையக் கூறியிருத்தல் கவனிக்கத்தக்கது.

பாட பேதம்: உவந்த தாயினன்: இடையி னின்றவும், சான்றுரு: என்றுரு வமைந்தவ ரிடையி னின்றவர்: இம்முதல்: சான்றவ ருணர் வினுக்கு: ஊன்றுரு வுணர்வினுக்கு: சான்றுரு வுலகினுக் குலகந் தாயி னன்: உணர்வினுக் குணர்வ தாயினர். (க)

---

* அசித்து - சடம் - அறிவில் பொருள். † சித்து - அறிவுடைப் பொருள்.

## பம்பைப் பொய்கை வருணனை

[ இராம லக்குமணர் வந்தடைந்த பம்பைப் பொய்கை, மலர்கள் மலர்ந்து விளங்கும் மாட்சியினால் மின்னல்கள் வெளிப்பட்ட மேகமோ, நட்சத்திரங்கள் பிரகாசிக்கும் ஆகாயமோ எனவும், யானைகள் களித்துக் குளிக்கும் காட்சியினால் மீன்கள் பிறழ்ந்து விளங்கும் கடலோ எனவுந் தோன்றியது.

தூல தேகத்தோடு மேலுலகத்தை அடைய விரும்பி வசிட்டமுனி சாபத்தாற் சண்டாளனாகித் தன்னைச் சரணடைந்த திரிசங்குராசனைத் தனது தவ மகிமையினால் தேவலோகத்துக் கனுப்பத், தேவர்கள் சண்டாள னென்று தள்ளிவிடத், தலைகீழாக வீழ்வானைத் தடுத்து, மத்தியந்தரத்தே நிறுத்தித் தான் அனுப்பியவனைத் தள்ளிய வானவரும் வானுலகும் உள்படப் 'பிரமசிருட்டிக்குப் பிரதிசிருட்டி செய்வே' னென்று, விசுவாமித்திர முனி வெகுண்டு வேறுலகு விதிக்கப் புகுந்தபோது, மலரவன் படைத்த கடலுக்கு மாறாகப் படைத்த கடலோ என்னும்படி அளவற்ற அகலமும் ஆழமும் உடையதாய் அந்தத் தடாகம் விளங்கியது.

அத் தடத்தில் அலர்ந்த செந்தாமரை மலர்களிலிருந்த அன்னங்கள், 'சீதை சென்றிருக்கு மிடத்தைத் தெரிவிக்கமாட்டாதயாம், இராமன் முகத்தை எப்படிப் பார்ப்பேம்! பாராமல் இறந்துவிடுவேம்!' என்று எரிபுகுவன போன்றன.

இராமனைக் கண்டு நீர்க்குள் ஒளிக்கும் மீன்கள், 'இவன் நம்மைக் கண்டால், சீதையின் கண்களை நினைந்து கவல்வா' னென்று மறைவன போன்றன. ]

## இராமன் சீதையை எண்ணி வருந்தல்

[ தையலர் கூந்தல்போலும் சைவலம்*, காதுபோலும் வள்ளை, கண்போலும் நீலோற்பலம், கன்னம்போலும் நீர்நிலை, வாய்போலும் செவ்வாம்பல், வதனம்போலும் தாமரை, கண்டம்போலும் சங்கு, கொங்கைபோலும் குமிழி, வயிற்று மடிப்புப்போலும் அலை, உந்திச்சுழிபோலும் நீர்ச்சுழி, விரல்போலும் கெளிறு†, இடைபோலும் பாம்பு, முழந்தாள்போலும் நண்டு,

* சைவலம் - பாசி. † கெளிறு - கெளிற்றுமீன்.

கணைக்கால்போலும் வரால், புறங்கால்போலும் ஆமை ஆகிய இவைகளை இராமன் கண்டு, சீதையின் அவயவங்களை நினைந்து வருந்தித் தாமரையை நோக்கிச், 'சீதை உன்னிடத்திருந்து வந்து என்னிடத்திருந்தாள். இப்போது என்னிடத்தில் இல்லை. அவளுக்கு உன்னையும் என்னையுமன்றி ஓரிடமும் இல்லையாதலால், அவளை நீ ஒளித்துவைத்துக்கொண்டு "காட்டமாட்டேன்" என்கின்றாய். ஒளித்ததன்றி உரையாடாத உன்னோடு உறவாடுவது எவ்வாறு?' என்றும், மயிலை நோக்கி, 'என்னுடனிருந்த சீதையின் சாயலுக்குத் தோற்று முன்பு ஒளித்தோடிய நீ இப்போது களித்தாடுகின்றாய். உனக்கு ஆயிரங் கண்கள் இருக்கின்றனவே. அப்படியுள்ள நீ காணாமல் அவள் எப்படிப் போய்விடுவாள்? எங்கே ஏகினாளென்று இயம்பாயோ?' என்றும் புலம்பினான்.

ஓர் ஆண் யானை துதிக்கையால் தண்ணீரை முகந்து தன் பெண் யானை வாயுட் பெய்யக் கண்டு, 'இவை பிரியாதிருத்தல் போலச் சீதையைப் பிரியாதிருக்கப் பெற்றேனில்லையே!' யென்று வருந்தினான். ]

### இராமன் அந்திவந்தனை முடித்தல்

[ இவ்வாறு பலவாறு கருதி நொந்து பொழுதுபோனது தெரியாதிருந்த இராமன், தம்பி சந்தியாவந்தன சமயம் சமீபித்ததெனத், தடாகத்துள் இறங்கி நீராடினான். விரக வெப்பத்தினால் மிகுந்து வெதும்பியிருந்த அவன் மேனி தோய்ந்த தடாக சலம், காய்ந்த இரும்பு தோய்ந்த நீர்போல வெப்பமுற்றது. அவன், அந்தி வந்தனை முடித்தபின், அங்குள்ள ஒரு சோலையில் தங்கி அன்றை யிரவைக் கழிப்பானாயினான். ]

### இராத்திரி வருணனை

2\. பூவொடுங் கினவிரவு புள்ளொடுங் கினபொழில்கள்
மாவொடுங் கினமரனு மிலையொடுங் கினகிளிகள்
நாவொடுங் கினமயில்க ணடமொடுங் கினகுயில்கள்
கூவொடுங் கினபிளிறு குரலொடுங் கினகளிறு

கொண்டுகூட்டு: பூ ஒடுங்கின; விரவு புள் ஒடுங்கின; பொழில்கள் மா ஒடுங்கின; மரனும் இலை ஒடுங்கின; கிளிகள் நா ஒடுங்கின; மயில்கள் நடம் ஒடுங்கின, குயில்கள் கூ ஒடுங்கின; களிறு பிளிறு குரல் ஒடுங்கின.

பொருள் : (அந்த இரவில், இராமன் நீராடிய பம்பைத் தடாகத்திலும் அதன் பக்கத்துள்ள அவன் தங்கிய சோலையிலும்) மலர்கள் குவிந்து உறங்குவனபோல ஒடுங்கின; (அந்தத் தடாகத்திலும் சோலையிலும் உள்ள) பறவைகள் உறங்கி ஒடுங்கின; (அந்தச் சோலையில் அலைந்து திரிந்த) மிருகங்கள் படுக்குமிடங்களிற் படுத்து உறங்கி ஒடுங்கின; (பறவைகள் மிருகங்கள் போல, ஒடுங்குந் தன்மையில்லாத) மரங்களும் தாம் ஒடுங்கவில்லையாயினும், தம் இலைகள் சுருங்கி உறங்குவனபோல ஒடுங்கின; கிளிகள் பேசாமல் நாக்கு அடங்கி உறங்கி ஒடுங்கின; மயில்கள் ஆடுதல் தவிர்ந்து விரித்த சிறகுகள் மடங்கி உறங்கி ஒடுங்கின; குயில்கள் கூவுதல் செய்யாமல் உறங்கி ஒடுங்கின; களிறுகள் பிளிறும் குரல் அடங்கி உறங்கி ஒடுங்கின.

புள் - பறவை. பொழில் - சோலை. மா - மிருகம். மரன், மரம் என்பதன் போலி. கூ, முதனிலைத் தொழிற்பெயராய்க் கூவுதல் என்று பொருள் பட நின்றது. 'விரவு' என்பதற்குப் (பல இனங்கள்) கலந்த என்று பொருள் கொள்ளலாம். விரவுபுள் - கலப்பான பலசாதிப் பட்சிகள். 'இரவு எனப் பிரித்து அவ் விராத்திரியில் இவை இவை ஒடுங்கின என்றும் உரைக்கலாம். "பொழிற்கண்" எனத் திரியாது, சந்த இன்பம் நோக்கி, பொழில்கள் எனப் பிரிந்தது. "மரனும்" என்ற இழிவுசிறப்பும்மை, அதனுடைய ஓரறிவுடைமையைக் கருதிற்று.'— வை. மு. கோ. பிளிறல் - ஒலித்தல். களிறு - ஆண்யானை; 'இங்கு யானைப் பொது.'

'புள்' என்ற பறவைப்பொது கிளி மயில் குயில்களை யுள்ளிட்டதாயினும் இவைகளைப் பிரித்து மீட்டுங் கூறியது இவைகள் மற்றைப் பறவைகளினும் சிறப்புடைமைபற்றி யென்க. அவ்வாறே 'மா' என்று கூறியதற்குப்பின் களிற்றைக் கூறியதும் என்க. பேசுதல் ஆடுதல் பாடுதல், முறையே, கிளி மயில் குயில்களின் சிறப்பு. பெருங் காத்திரம் யானையின் சிறப்பு.

பாட பேதம் : பொருவில் மாவுறங்கின.

(உ)

[ அந்தப் பம்பைத் தடாகத்திலும் பக்கத்துள்ள சோலையிலும் போலப், பூமியில் மலை கடல் முதலிய எல்லா இடங்களிலும் உள்ள எல்லா உயிர்களும் உறங்கின. உறங்காத பேய்களும் உறங்கின. ஆயினும் பாற்கடலிற் பள்ளிகொண்டு சதாகாலமும் துயில்வோன்* தூங்காதிருந்தான். ]

* விட்டுணுவின் அவதாரமான இராமன்.

சூரியோதயமாக, இராம லக்குமணர் சீதையைத் தேடிச் செல்லல்

[ இரவின் இருளும் இராமன் விரகமும் நீங்க இரவி உதயமானன். இராம லக்குமணர் சீதையைத் தேடிப் பல காடுகளும் மலைகளும் கடந்து விரைந்து சென்றார்கள். ]



## 2. அனுமப் படலம்

[ இராமன் அனுமானைச் சந்தித்துச் சல்லாபித்ததைக் கூறுவது ]

இராம லக்குமணரைக் கண்ட சுக்கிரீவாதியர் அஞ்சி ஓடுதல்

[ இராம லக்குமணர், ருசியமுகபருவதத்தை அடைந்து அதன் மேல் ஏறலுற்றனர். ஏறுதல் அருமையான அந்த மலையை அவர்கள் எளிதாகவும் விரைவாகவும் ஏறுதலையும், அவர்கள்பால் விளங்கிய வீரத் தோற்றத்தையுங் கண்டு, அம் மலைவாசிகளான சுக்கிரீவாதியர், 'இவர்களை எதிர்த்தலைப்பற்றிப் பின்பு ஆலோசிப்போம்; இப்பொழுது தப்பிப் பிழைத்தலே தக்க உபாய' மென்று ஒரு குகைக்குள் ஓடி ஒளித்தார்கள். சுக்கிரீவன், தன் அமைச்சனை அனுமானை நோக்கி, 'இவர்கள் என்னைக் கொல்ல வாலி ஏவ வந்தவர்கள்போலும்!' என, அவன் ஏனைய வானரரோடு தானும் ஓடி வந்தபோது, இராம லக்குமணரைக் கவனத்தோடு நோக்கி, அவர்களது உண்மைத் தன்மையை ஊகித் துணர்ந்தவனாதலால், அச்சமற்றவனாய், 'அஞ்சுதற்குக் காரணமில்லை. இங்கே நீவிரெல்லீரும் அஞ்சாதிருங்கள். யான் சென்று யாவும் தெரிந்து வருவேன்' என்று செப்பிவிட்டுச் சென்றான். ]

இராமனை அனுமான் சந்தித்தல்

[ சென்றவன், ஒரு பிராமணப் பிரமசாரி வடிவங்கொண்டு, இராம லக்குமணரை அடுக்கப் போய், அவர்கள் அறியாமல் மறைவாக நின்று நோக்கி, 'இவர்கள் தவவேடந் தாங்கிய மெய்யினராயினும், அந்த வேடத்துக்கு விரோதமான வில்லேந்திய கையினராய் இருக்கின்றார்கள். திரிமூர்த்திகள் இருமூர்த்திகளானார் போல்கின்றார். இவர்கள்பாற் கவலைக்குறி காணப்படுகின்றது.

ஆயின், இவர்கள், எளிதிலே கவலைக் கிடங்கொடுக்கும் இயல்பின ரல்லர். இவர்கள் மனத்துள் முக்கியமாகக்கொண்ட ஏதோ ஒரு பொருளை இழந்து தேடுகின்றனர். சுக்கிரீவாதியர் அஞ்சுதற்குரிய சினத்தோற்றம் சிறிதுமிலர். சாந்தமூர்த்திகள்; தயாசொரூபிகள்; தருமமே தமது தனமாகக் கருதுவோர்' என்று எண்ணி, நெடுங் காலம் பழகியிருந்து பிரிந்துபோய்த் திரும்பிவந்த அன்பரைக் கண்டான்போன்று, 'ஆ! ஆ! ஆச்சரியம்! இவர்களைக் கண்ட மிகக் கொடிய வேங்கை முதலிய மிருகங்கள், தங்கள் குட்டிகளைக் கண்டாற்போல, அன்பொடு பின்தொடர்கின்றன! பறவைகள், இவர்கள்மேல் வெயில் படாமல், சிறகு விரித்து நிழல்செய்து பறந்து செல்கின்றன! இவர்கள் வெயில் வெப்பமுறாமல், மேகங் கள் சீதளமான சிறிய திவலைகளைச் சிந்துகின்றன! இவர்கள் நடக் கும் வழியிற் கிடக்கும் வெம்மையும் வன்மையுமான சரள்கள் * தண்மையும் மென்மையுமான மலர்கள் போலக் குளிர்ந்து குழை கின்றன! இவர்கள் போமிட மெல்லாம் மரியாதையாக வழிவிலகி வணங்குவன போலத் தாவரங்கள் சாய்ந் தொதுங்கித் தலைதாழ் கின்றன! என்னே! இவர்கள், இருவினைக் கட்டறுத்துப் பிறவித் துன்பொழித்து முத்தி யின்பளிக்கும் முதற்றேவர்தாமோ! இவர்கள் திறத்தில் எனக்கு என்பு நெக்குருக அன்பு மிக்கு வளர் கின்றது!' என்று பரவசப்பட்டு எண்ணி, இராம லக்குமணர் எதிரேசென்று, 'உங்கள் வரவு நல்வரவாகுக' என்றான். இராமன், 'நீ ஆர்? எங்கிருந்து வந்தாய்?' என, 'வாயுதேவனுக்கு அஞ்சனை தேவி வயிற்றில் வந்தேன். அனுமப் பெயரினேன். இந்த மலை யில் வாழும் சுக்கிரீவ ராசனுக்குத் தொண்டனேன். அவன் உங்கள் வருகையைக் கண்டு "யாவரென அறிந்து வா!" என இட்ட கட்ட ளையை இயற்றவந்தேன்' என்றான்.

அப்போது, இராமன், 'இவனினும் நல்லார் எங்கும் இல் லார். இவன்பால் ஆற்றலும் அடக்கமும் அறிவும் கல்வியும் ஆகியவைகள் ஒன்றினொன்று மிகுதல் குறைதலால் ஏற்படும் வேற்றுமையில்லாமல் ஒற்றுமைப்பட்டு விளங்குகின்றன' என்று, சிந்தையுள்ளே தெளிந்து, இலக்குமணனை நோக்கிச், 'கலைகளும் மறைகளும் இவன் கல்லாதன இல்லாதன வெனும்படி எல்லாங் கற்றுச் சகலகலாபண்டிதனாகவும் சதுர்வேதபாரங்கதனாகவும்

* சரள் - சரளை, பரல், பருக்கைக் கற்கள்.

சால்புற்றிருக்குந் தன்மை, இவனது சொற்றிறமையினால் தெற்றெனப் புலப்படுகின்றது. தேவர்களுள்ளேயும் முனிவர்களுள்ளேயும் இவன்போலும் வாக்குவல்லமையுடையார் எவரும் இலர். மும்மூர்த்திகளே இவன் மொழிக்கு எதிர்மொழி இயம்பவல்ல சொல்வன்மையுடையாரலர்' என்று கூறி, அனுமானை நோக்கிச், 'சுக்கிரீவன் இருக்குமிடந்தேடி அவனைக் காணும் ஆசையால் யாங்கள் இங்கே வந்தேம். அவனைக் காட்டுவாயாக' என்றான். அனுமான், 'போர்வீரருள்ளே உங்களைப்போலும் புனிதர் யாரே யிருக்கின்றார்! எங்கள் அரசன் உங்களைத் தேடிவரற்பாலனாக விருக்க, நீங்களே அவனைத் தேடிவந்தீர்க ளென்றால், அவன் செய்துள்ள தவப்பயன் மிகப்பெரிது. சூரிய குமாரனை சுக்கிரீவனை இந்திர புத்திரனை இரக்கமில்லாத வாலி சீறி வருத்தத் தெருமந்து நொந்து, உலகத்துள்ள துன்பம் எல்லாவற்றுக்கும் தான் ஒருவனே உறைவிடமாய், இந்த மலையில் என்னோடு இருக்கின்றவனை நல்ல பாக்கியமே நாடிவந்தாற்போல வழி வினவிக்கொண்டு வந்து சேர்ந்தீர்கள். அடியேங்கள் உங்கள் அடைக்கலம். தம்மைக் கொல்லப்புகுந்தார்க்கு அஞ்சிச் சரண் புகுந்தார்க்கு அபயமளிப்பதினும் அதிகமான தரும மில்லை. உலக முழுதும் காக்கும் உங்களுக்கு எங்களைக் காத்தல் எளிது. சுக்கிரீவனிடம் உங்களை யாரென்று சொல்வேன்* சொல்லுங்கள்!' என்றான்.

இலக்குமணன், 'இந்த ஆண்டகை, தசரத சக்கரவர்த்தியின் தலைமகன். இவன் நாமம் இராமனென்பது. தாய் கட்டளையைத் தலைமேல் தாங்கித் தம்பிக்குத் தன் அரசைத் தந்து தவமேற்கொண்டு வனவாசஞ் செய்கின்றான். யான் இவனுக்கு ஏவல் செய்யும் இளையேன்.' என்று கூறி, இராமன் அவதார முதலாக இராவணன் அதிக்கிரமம் இறுதியாக நிகழ்ந்த செய்திக ளெல்லாவற்றையும் ஒன்றும் விடாமல் உரைத்தான். உடனே, அனுமான் இராம லக்குமணர் பாதங்களில் வீழ்ந்து பணிந்தான். பணியவே, இராமன், 'பிராமணா! ஏன் செய்யத்தகாத செயலைச் செய்தாய்? சத்திரியனை அந்தணன் வணங்குதல் தருமமன்று' என, அனுமான், 'அடியேன் வானரரில் ஒருவன்' என்று தன் சுவரூபம் தோன்ற நின்றான். ]

* 'நீங்கள் யார்?' என்னாமல் இவ்வாறு கூறிய நாகரிக விநயம் கவனிக்கத்தக்கது.

## அனுமானது வடிவப் பெருமை

3. கண்டில னுலக மூன்றுங் காலினாற் கடந்து கொண்ட
புண்டரி கக்க ணாழிப் புரவலன் பொலங்கொள் சோதிக்
குண்டல வதன மென்றாற் கூறலாந் தகைமைத் தொன்றோ
பண்டைநூல் கதிரோன் சொல்லப் படித்தனன் படிவ மம்மா

**கொண்டுகூட்டு:** *மூன்று உலகையும் காலினால் கடந்துகொண்ட புண்டரிகக் கண் ஆழிப் புரவலன் (ஆன இராமன், அனுமானது) பொலங் கொள் சோதிக் குண்டல வதனத்தைக் கண்டிலன் என்றால், பண்டை நூல் கதிரோன் சொல்லப் படித்தனன் (ஆன அவனது) படிவம் கூறலாம் தகைமைத்து ஒன்றோ?*

**பொருள்:** *(திருமால் அறக்குறிய வாமனனாகி மாவலிபாற் சென்று மூன்றடி மண் வேண்ட, அவன் 'அளித்தேன், அளந்து கொள்' என, மிக நெடிய திரிவிக்கிரமனாகிச் சுவர்க்க மத்திய பாதல மென்னும்) மூன்று உலகங்களையும் இரண்டு அடியளவாலே கடந்து தனக்கு உரிமையாக்கிக் கொண்ட திருமாலின் அவதார மான இராமன் (அனுமானது வடிவத்தைக் கழுத்துக்குமேற் காணமுடியாமல்) முகத்தைக் கண்டானில்லை யென்றால் அப்படிப் பட்ட அனுமான் வடிவம் இத்தகையதென்று சொல்லக்கூடிய தொன்றோமோ?*

*புண்டரீகம் கண் ஆழி புரவலன் - செந்தாமரை மலர்போலும் கண் களும் சக்கராயுதமுமுடைய காவற் கடவுளான திருமாலின் அவதாரமான இராமன். பொலம் கொள் சோதிக் குண்டல வதனம் - பொன்னினாற்செய்த பிரகாசமுடைய குண்டலங்களை(க் காதுகளில்) அணிந்து விளங்கும் முகம். பண்டை நூல் கதிரோன் சொல்லப் படித்தனன் படிவம் - பழமையான (வியாகரண முதலிய) சாஸ்திரங்களைச் சூரியன் கற்பிக்கக் கற்ற அனுமானது வடிவம். அம்மா, வியப்பிடைச்சொல்.*

*இக்கவி, கம்பரது அதிசய கவித்துவ சாதுரிய விசேடத்துக்குக் காட்டாகக்* காட்டத்தக்க அதி அற்புதக் கவிகளி லொன்று.*

*மானிடனான இராமன் வாயுதேவ குமாரனான மகிமையுடைய அனுமா னது பிரமாண்டமான விசுவரூபத்தை முழுதுங் காணமுடியாத இயல்பைக் கூறுமுகமாக, அவ் இராமன் முன்பு திரிவிக்கிரமனாய்த் திரிலோகங்களையும்*

---

* *காட்டு - உதாரணம்.*

இரண்டடிச்சுவட்டுள் அடக்கிய திருமாலாதலால், அவனால் முகங்காண முடியாத வடிவத்தின் பெருமை மனத்தினாற் பாவிக்கற்பாலதே யன்றி வாயினாற் பகரற்பால தொன்றன்று என்று அதிசயம் விளையக் கூறிய கவி சமற்காரம் கழிபேரின்பம் பயப்பதாயிருத்தல் காண்க. இது, கோசலை, 'உலகியாவையும் – மன்வயிற்றின் அடக்கிய மாயனைத் – தன் வயிற்றின் அடக்கும் தவத்தினாள்' என, மந்திரப்படலத்தில் வந்திருக்கிற கவிப் பகுதியை நினைவுறுத்துகிறது.

பாட பேதம்: தகைமைத் தன்றால். (ங)

**இராமன் அனுமான் வடிவத்தை அதிசயித்துக் கூறல்**

4. தாட்படாக் கமல மன்ன தடங்கணான் றம்பிக் கம்மா
கீட்படா நின்ற நீக்கிக் கிளர்படா தாகி யென்றும்
நாட்படா மறைக ளாலு நவைபடா ஞானத் தாலும்
கோட்படாப் பதமே யைய குரக்குருக் கொண்ட தென்றான்

கொண்டுகூட்டு: தாள் படாக் கமலம் அன்ன தடங்கணான் (ஆன இராமன்,) தம்பிக்கு, 'ஐய, என்றும் நாள்படா மறைகளாலும் நவைபடா ஞானத்தாலும் கோள்படாப் பதம் (- பரம்பொருள்) கீழ்ப்படா நின்ற (- தாழ்ந்தவை) நீக்கி, கிளர் (- உயர்ந்தவை) படாதது ஆகி, குரங்கு உருக் கொண்டது அம்மா!' என்றான்.

பொருள்: தண்டொடு பொருந்தாத தாமரைப்பூ (உளதேல், அந்தப் பூ)வைப் போன்ற விசால நேத்திரமுடைய இராமன், இலக்குமணனை நோக்கித், 'தம்பி! என்றும் புதுமையாயுள்ள வேதங்களாலும் குற்றமற்ற தத்துவ ஞானத்தாலும் அறிந்து கொள்ளப்படாத பரம்பொருள் (தன்னுளடங்கிய) தாழ்வானவைகளை நீக்கி, உயர்வானவைகள் நீங்காததாய், அனுமானாக வானர வடிவங் கொண்டது. இது ஆச்சரியம்!' என்று கூறினான்.

தாள், தாமரைப்பூவினது தாளாகிய நாளம் என்னும் தாமரைத் தண்டை உணர்த்தியது. தடம் - விசாலம். அம்மா, அதிசயக் குறிப்புச் சொல். 'கீழ்ப்படாநின்றன' என்பது, அன்சாரியை பெறுமல் 'கீழ்ப்படா நின்ற' என வந்தது. இதனைக் (1) கீழ்ப்படா - கீழ்ப்பட்டு, நின்ற - நின்றன - நின்றவை என்றேனும், (2) கீழ்ப்படாநின்ற - கீழ்ப்படுகின்ற - கீழ்ப்படு கின்றன - கீழ்ப்படுகின்றவை என்றேனுங் கொள்ளலாம். (1) கீழ்ப்பட்டு நின்றவை என்று கொண்டால், 'கீழ்ப்படா' என்பது செய்யா என்னும்

வாய்பாட்டு உடன்பாட்டு இறந்தகால வினையெச்சமாம். (2) கீழ்ப்படு கின்றவை என்று கொண்டால், 'கீழ்ப்படாநின்ற' என்பது, கீழ்ப்படு (பகுதி), ஆநின்று (நிகழ்கால இடைநிலை), அ (அஃறிணைப் பன்மைப் படர்க்கை விகுதி) ஆகியவைகள் சேர்ந்தாய பலவின்பாற் படர்க்கை நிகழ்கால வினைமுற்றுப் பெயர். கிளர்தல் (- உயர்தல்) என்னும் பொருளுடைய முதனிலைத் தொழிற்பெயராகிய 'கிளர்' என்பது, ஆகுபெயராய், உயர்வானவை யென்ற பொருள்குறித்து நின்றது. படாது - படாதது - நீங்காதது; மணிமேகலை யிற் சிறைசெய் காதையில், 'வான்றரு கற்பின் மனையறம் பட்டேன்' என்ப தில் 'படுதல்' என்பது நீங்குதற் பொருளில் வருதல் காண்க.

நாள்படா - நாட்படாத - நாட்செல்லாத - நாளாகாத - புதுமையான. நாள் - காலம்.(—நூ. அ.) எனக் கொண்டு, 'நாட்படா' என்பதற்குக் காலத் தின்கட்படாத (- காலங்கடந்த - காலாதீதமான) என்று பொருள்கொள்ள லும் பொருந்தும். மறை - வேதம். நவை - குற்றம். கோள்படா - கோட் படாத - (அறிந்து)கொள்ளப்படாத.

பதம் - பொருள். 'தற்பதமாய்ப் பரபதமாய்' (— **கோயிற்புராணம்** பாயிரம் ௩) என்றும், பரபதம் - மேலாகிய பொருள் என்றும், பரம்பொருள் - மேலான வஸ்து ('எங்குமாம் பரம்பொருளை யாமும் வணங்குதுமே.' —**மகாவாக்கியம்**, பாயிரம் க.) என்றும் தமிழ்ச் சொல்லகராதியில் வருதல் காண்க. இதனால், பரபதமும் பரம்பொருளும் ஒருபொருள் குறித்தவை யாய்ப் பரியாயச் சொற்றொடர்களா யிருத்தல் தெளிவு.

மேற்கூறிய உதாரணக் கவியில் **பதம்** 'பர' என்ற அடையினால் **பரம் பொருளை** உணர்த்தியவாறே, இந்தக் கவியிலும் **பதம்** 'என்றும் நாட் படா மறைகளாலும் நவைபடா ஞானத்தாலும் - கோட்படா' என்ற விசேடணத்தால் **பரம்பொருளை** உணர்த்தியது தெளிவாம்.

தாழ்வானவை என்ற பொருளுடைய 'கீழ்ப்படா நின்ற' என்பதும் உயர்வானவை என்ற பொருளுடைய 'கிளர்' என்பதும் ஒன்றுக்கொன்று எதிர்மறை. 'நீக்கி' என்பதற்கு 'நீங்காதாகி' என்ற பொருள் குறித்த 'படாதாகி' என்பது எதிர்மறை.

'கீழ் என்பதன் ஈற்று ழகரம், வருமொழி முதலில் வல்லினம் வந்து புணர்ந்தபோது டகரமாகத் திரிந்தது ; "ஐம்மூன்ற தாமுடல் வன்மையின் வந்திடி லாறுடைந்தாம்" என்னும் வீரசோழிய விதியைக் காண்க. இனி, ஈற்று ழகரத்துக்கு எதுகை நோக்கி ளகரம் போலியாய், அது டகரமாகத் திரிந்ததெனினும் அமையும். இராமபிரான் தம்பியை "ஐய" என்றது அன்பு பற்றிய மரபுவழுவமைதி. ஐய - அழகிய என்றுமாம். தம்பிக்கு என்றான்

என இயையும். குரங்கு + உரு = குரக்குரு : வேற்றுமையில் மென்றொடர் வன்றொடராயிற்று.' — வை. மு. கோ.

காரணத்தில் இல்லாதது காரியத்திற் காணப்படா தாதலாலும், பரம்பொருளின் கூறுகளான திரிமூர்த்திகளுள் காத்தற் கடவுளும் அழித்தற் கடவுளு முண்மையாலும், காத்தற் குணமும் அழித்தற் குணமும் ஆகிய எதிரிடைப் பொருள்கள் பரம்பொருளினிடத்து உள்ளனவாதல் பெறப்படுதல் போல, நல்லவை தீயவை, உயர்ந்தவை தாழ்ந்தவை முதலிய (நீரும் நெருப்பும் போல ஒன்றுக் கொன்று மாறான) எல்லா எதிரிடை யிரட்டைகளும் பரம்பொருளினிடத்து அடங்கினவாயிருத்தல் பெறப்படும். இக் கருத்துக்கொண்டு கம்பர்,

> ' மேலொருபொருளுமில்லா மெய்ப்பொருள் வில்லுந் தாங்கிக்
> கால்தரை தோய நின்று கட்புலக்குற்ற தம்மா!' *

என்று வாலி இராமனைப் பிரத்தியட்சமான பரம்பொருளாகக்கொண்டு, 'பாவம் நீ, தருமம் நீ, பகையும் நீ, உறவும் நீ' † என்று னென்றார். இக் கருத்துப் பற்றியே, அவர், இராமன்,

> 'கீட்படா நின்ற நீக்கிக் கிளர்படா தாகி என்றும்
> நாட்படா மறைக ளாலும் நவைபடா ஞானத் தாலும்
> கோட்படாப் பதமே, ஐய, குரக்குருக் கொண்ட' தென்றான்

என்றார். இவ்வாறு கூறினமை மேற்கூறிய கருத்துப்பற்றி யன்றெனில், பரம்பொருளினிடத்திற் கீழ்மையானவை யுண்டோ என்னும் ஆசங்கை நிகழும்.

இவ்வாறு இக்கவியில், வெறுத்தற்குரிய கீழ்மைக் குணங்களை நீக்கி விரும்புதற்குரிய மேன்மைக் குணங்கள் நீங்காததாய்ப் பரம்பொருள் அனுமனாக வடிவெடுத்து வந்ததென்று இராமன் கூறினா னென்றதற் கியைய, அடுத்த கவியில், அவன், வெறுக்கும் கீழ்மை இல்லாததாய் விரும்பும் மேன்மை உள்ளதாய்ப் பரம்பொருள் வடிவங்கொண்டதென்ற அனுமனைத் தம்பியும் தானும் துணையாகப் பெற்றமையால், தங்களுக்கு வெறுப்பான துன்பம் இல்லையானது, விருப்பான இன்பம் உள்ளதானது என்று கருதி, 'நம்பியைப் பெற்றேம். நம்பால் — இல்லையே துன்பம் ஆன தின்பமும் எய்திற்று' என்று னென்றார்.

மேற்கூறியவாறு விசேடித்துக் 'கீட்படா நின்ற நீக்கிக் கிளர்படா தாகிப்' பரம்பொருள் 'குரக்குருக்கொண்டது' என்றது, விசேடியாது பரம்பொருள் 'குரக்குருக்கொண்டது' என்பதனினும் அதிகமாக அனுமனை உயர்த்துக் கூறியதாம். இது, எதுபோலுமெனில், ஒரு மாதின்

---

* வாலி வதைப் படலம் ௧௪௮. † வாலிவதைப் படலம் ௧௨௧.

வதனத்தைக் களங்கம் தேய்தல் முதலிய தாழ்குணங்களெல்லாம் நீக்கி ஒளி குளிர்ச்சி முதலிய உயர்குணங்களொன்றும் நீங்காததாயுள்ள மதிபோலு மென்பது அவள் வதனத்தை மதிபோலு மென்பதனினும் சிறப்பிப்பதா யிருப்பதுபோலும் என்க.

'மறைகளாலும் ஞானத்தாலும் கோட்படாப் பதம்' என்றது, வேத விற்பன்னரும் தத்துவஞானிகளும் முறையே வேதங்களையும் தத்துவ ஞானத்தையும் கருவியாகக்கொண்டு ஆராய்தலால் அறியப்படாத பதத்தை.

அனுமான் வடிவம், மூவுலகையும் ஈரடியாக அளந்த நெடியோனை திருமாலாலும் கண்டமட்டும் காணமுடிந்ததே யன்றிக் கடைபோக (முகத்தை)க் காண முடியாததா யிருந்ததென்று இதற்கு முந்திய பாட்டிற் கவிக்கூற்றாகக் கூறிய கம்பர், இந்தப் பாட்டில் கதாநாயகன் கூற்றாகத் திருமால் அனுமான் முடிகாண முடியாமைக்குரிய காரணத்தைத் திருமாலைக்கொண்டே தெரிவிப்பாராய்த் திருமாலுக்கு மூலமாய் முதற்பொருளான 'பரம்பொருளே அனுமானாக வடிவமெடுத்து வந்தது' என்று (திருமாலான) இராமன் கூறினா னென்றார்.

'கீழ்மைப்பட்டு நின்ற (ராஜச தாமச) குணங்களைப் போக்கி (சுத்த சாத்விக குணமயமானதாய்) ஒளி அழியாததாய் எப்பொழுதும் நாட் செல்லாத வேதங்களாலும் குற்றம் (ஐயந்திரிபுகள்) இல்லாத தத்துவ ஞானத்தாலும் அறியப்படாத மோக்ஷலோகமே வானரவடிவத்தை எடுத்து வந்ததாம்.'— வை. மு. கோ. (௫)

## அனுமான் சுக்கிரீவனை அழைத்துவரப் போதல்

[ இராமன் இலக்குமணனை நோக்கி, 'நாம், இத்துணைப் பேராற்றலும் பேரறிவுமுடைய பெரியோனைப் பெற்றேமாதலால், துன்பமற்றேம்; இன்பமுற்றேம். இவனைத் தொண்டு கொண்ட சுக்கிரீவனது உயர்வு சொல்லுந் தரத்ததோ!' என்று சொன்னான். அவர்கள் இருவரும் அவனை இனிது நோக்கி அகமகிழ்ந்து முகமலர்ந்த வண்ணமாய் நிற்க, அவன், அவர்களை நோக்கிச், 'சிறிதுபோது இங்கே யிருங்கள். நான் சுக்கிரீவனைத் துரிதமாக அழைத்து வருவேன்' என்று சொல்லி விடைபெற்று விரைந்து சென்றான். ]

## 3. நட்புக்கோட் படலம்

[ இராமன் சுக்கிரீவனோடு சினேகஞ் செய்ததைக் கூறுவது. ]

---

### சுக்கிரீவன் இராம லக்குமணரை அடைதல்

[ *இராம லக்குமணரிடம் சுக்கிரீவனைக் கொணர்வதாகக் கூறிச் சென்ற அனுமான், அவனிடம் அணுகியபோது, 'எல்லாரும் ஈடேறினோம்! வாலிக்குக் காலன் வந்தான்! நாமும் நம் குலமும் ஞாலமும் உய்ந்தோம்! உய்ந்தோம்! வாலியைக் கொன்று உனக்கு அரசளிப்பவன் வந்தான்!' என்று கூறி உவகைக் கூத்தாடினான். பின்பு இராம லக்குமணர் வரலாறு முழுதும் மொழிந்து, 'அவர்கள் சீதையைத் தேடுதற்கு உனது உதவியை நாடி உன்னுடன் சினேகஞ்செய்ய வந்திருக்கின்றார்கள். அவர்களைக் காண வா!' என, அவன், 'உன்னையுடைய எனக்கு என்னது அரிது?' என்று முகமன் மொழிந்து, அவனுடன் சென்று இராம லக்குமணரை அடைந்தான்.*

*அடைந்தவன், ஒரு மரகத மலை, சிகரத்தில் மேகம் வீற்றிருக்க, அதன்கீழ்ச் சந்திரன் தயங்க, அதன்கீழ்த் தாமரை மலர்கள் பூத்துப் பொலியக் கண்டாற்போலச், சிகையும் முகமும் கைகால்களும் உந்தியும்* காண்பவர் கண்ணுக்கும் கருத்துக்கும் களிப்பும் குளிர்ப்பும் அளிக்கும் பசிய மேனியுமுடையனை இராமனையும் பச்சைமலைப் பக்கத்தே பசும் பொன்மலைபோல நின்ற இலக்குமணனையும் பார்த்தான்.* ]

### சுக்கிரீவன் அவர்களைக் கண்டு அதிசயபரவசனாதல்

5. நோக்கினா னெடிது நின்றா னொடிவருங் கமலத் தண்ணல்
ஆக்கிய வுலக மெல்லா மன்றுதொட் டின்று காறும்
பாக்கியம் புரிந்த வெல்லாங் குவிந்திரு படிவ மாகி
மேக்குயர் தடந்தோள் பெற்று வீரராய் விளைந்த வென்பான்

கொண்டுகூட்டு: *(சுக்கிரீவன் அவர்களை) நோக்கினான், நெடிது நின்றான், 'நொடிவு அருங் கமலத்து அண்ணல் ஆக்கிய உலகம் எல்லாம்,*

---

* *உந்தி - கொப்பூழ்*

அன்றுதொட்டு இன்றுகாறும், புரிந்த பாக்கியம் எல்லாம் குவிந்து இ
படிவம் ஆகி, மேக்கு உயர் தடந்தோள் பெற்று, வீரராய் விளைந்த!' என்பா

பொருள் : சுக்கிரீவன், இராம லக்குமணரைப் பார்த்து
அவர்கள் அழகில் ஈடுபட்டு, நெடுநேரம் அதிசய பரவசனா
நின்று, 'பிரமன் படைத்த உலகத்தா ரெல்லாரும், படைப்பு
தொடங்கிய அந்நாள் தொட்டு இந்நாள்மட்டும், செய்த புண்ண
யங்க ளெல்லாம் திரண்டு இரண்டு வடிவமாகி, மேலாக வளர்ந்
தோள்கள் பெற்று, வீரராகிப் பலப்பட்டன!' என்று எண்ணுவ
னான்.

நெடிது - நெடுநேரம். நொடித்தல் - சொல்லுதல். அண்ணல் - பெரு
மையிற் சிறந்தோன். நொடிவு அருங் கமலத்து அண்ணல் - சொல்லுதற்
கரிய (மகிமையுடைய திருமாலின் உந்தித்) தாமரையில் உதித்த பெருமை
யுடையோனான பிரமன். ஆக்குதல் - சிருஷ்டித்தல். காறு - அளவு
பாக்கியம் - புண்ணியம். படிவம் - வடிவம். மேக்கு - மேல். புரிந்த பாக்கி
யம் என மாற்றுக. 'ஆய்', ஆக என்னும் எச்சத்தின் திரிபு. 'விளைந்தன'
என்பது அன் சாரியை பெறுமல் 'விளைந்த' என நின்றது.

'உலகமெல்லாம் புரிந்த பாக்கியமெல்லாம் குவிந்து மேக்கு உயர் தடந்
தோள் பெற்று இருவீரர் படிவமாக ஆகி விளைந்தன' என இயைத்தும்
பொருள் கூறலாம்.

'**நின்றான்**' என்பது, அதன் சாதாரண அருத்தமான நிற்றலைச் செய்தா
னென்ற பொருளுடையதாக வன்றிக், கண்ட பொருளின் அதிசயமான
அழகில் கருத்து ஆழ்ந்து அழுந்த அவசமாகி, அந்த அழகை நோக்கிய கண்
இமையாமல் நோக்கி நுகரும் இன்ப நுகர்ச்சியிற் பொழுது போவது தெரி
யாமல், தாழ்த்து நின்றா னென்னும் விசேடமான பொருளுடையதாகப் பிர
யோகிக்கப்பட்டிருப்பது கவனிக்கத்தக்கது. சூர்ப்பநகை சீதையைக் கண்ட
போது 'நெடிது நோக்கி.........அழகுக் கெல்லை யில்லையா மென்ன **நின்
றாள்**' என்பதையும், அவள் சீதாராமர் இருவரையும் ஒருசேரப் பார்த்த
போது 'பொருதிறத்தானை நோக்கிப் பூவையை நோக்கி **நின்றாள்**' என்ப
தையும்*, அயோமுகி இலக்குமணனைக் கண்டு '**நின்றனள்** ஆசையின்
நீர்கலுழும் கண் - குன்றி நிகர்ப்ப குளிர்ப்ப விழிப்பாள்' என்பதையும்†
இராம லக்குமணரைக் கண்ட அனுமான் 'இருவரை எய்தநோக்கி............
**நின்றான்**' என்பதையும்‡ காண்க.

---

* க. ரா. சா. ஆரணிய காண்டம், பாட்டு 20, 21, † அயோமுகிப் படலம், ௫௧.
‡ அனுமப் படலம். ௧௧.

*சுக்கிரீவன், இராம லக்குமண ரிருவருடைய அவயவங்க ளனைத்தை யும் நோக்கி அகம் மிக மகிழ்ந்தவன், 'மேக்குயர் தடந்தோள் பெற்று' எனத் தோள்களை மட்டும் சொல்வானேனெனில், அவன் அவர்கள் தோள் களை நோக்கினபோது அவை அசாதாரண அற்புத பலமுடையவை யென் றும், அந்தப் பலம் வாலி தோள்வலிக்கு அதிகமானதாய் அவனைக் கொல்ல வல்லதென்றும் கருதியதனு லென்னலாம். அவ்வாறு கருதியது காரண மாகவே, அவர்களது அழகு, அருள், அறிவு, ஆற்றல் ஆகியவைகளுள் ஆற்றலைச் சிறப்பாகக்கொண்டு, அவர்களை அழகினர், அருளினர், அறிவின ரென்னுமல் 'வீரர்' என்றுன் போலும்.*

*'உலகமெல்லாம் புரிந்த பாக்கியமெல்லாம் வீரராய்' உற்றன, அல்லது வந்தன, அல்லது தோன்றின, அல்லது வெளிப்பட்டன என்னுமல்* **'விளைந்தன'** *என்றது, உலகத்தோருடைய புண்ணியங்கள், ஒன்றும் குன்றுதலின்றி, எல்லாம் சேர்ந்து இருவீரராக உருவான மாத்திரையா யில்லாமல், அப் புண்ணியங்க ளனைத்தும் விதைகள் போல ஒன்று பலவாக* **விளைந்து** *ஒருங்கு திரண்டு இரண்டு வீரராயின வென்று குறித்தற்குப் போலும்.*

பாட பேதம் : *புரிந்த தெல்லாம் : பெற்ற : விளைந்த தென்பான்.*

(ரு)

6. தேறின னமரர்க் கெல்லாந் தேவராந் தேவ ரன்றே
மாறியிப் பிறப்பில் வந்தார் மானுட ராகி மன்னே
ஆறுகோள் சடிலத் தானு மயனுமேன் றிவர்க ளாதி
வேறுள குழுவை யெல்லா மானுடம் வென்ற தென்றே

**கொண்டுகூட்டு :** *'அமரர்க்கு எல்லாம் தேவராம் தேவர் இப் பிறப்பில் மாறி மானுடர் ஆகி வந்தார். ஆறுகொள் சடிலத்தானும் அயனும் என்று இவர்கள் ஆதி வேறுள குழுவை எல்லாம் மானுடம் வென்றது!' என்றே தேறினன்.*

பொருள் : *'முற்பிறப்பில் தேவர்க ளெல்லாருக்கும் முதன்மை யுடைய தேவர்களாகிய மும்மூர்த்திக ளென்னும் தேவர்களாயிருந் தவர்கள், இப்பிறப்பில் (மூவராந் தன்மையும் தேவராந் தன்மை யும்) மாறி, மனிதராய் வந்தார் (ஆவர், இவ்விருவரும் : ஆகவே) சிவனும் பிரமனும் என்ற இவர்கள் முதலிய வெவ்வேறுகவுள்ள தேவ கணங்க ளெல்லாவற்றையும் மானுடகணம் செயித்தது!' என்று நிச்சயித்தான் சுக்கிரீவன்.*

அமரர் - தேவர். சடிலம் - சடை. அயன் - பிரமன். குழு - கணம் - கூட்டம். மானுடம் - மனித இனம் - மனுஷ ஜாதி. அன்றே, மன்னே, அசைகள். பாட்டின் முடிவில் நின்ற ஏ, தேற்றப் பொருளில் வந்த இடைச்சொல். அன்றே என்பதை அல்லவா என்னும் பொருளுடையதாக வுங் கொள்ளலாம். 'என்றே தேறினன்' என(க் கடைதலைவிற்பூட்டு ஆக) இயைக்க.

கவியில் மனிதப் பிறப்பை 'இப்பிறப்' பென்றதனால், உரையில் தேவப் பிறப்பு முற்பிறப் பெனப்பட்டது காண்க.

முற்பிறப்பில் மூவராய்த் தேவராயிருந்தவர்கள் இப்பிறப்பில் இருவ ராய் மனிதராய் மாறி வந்தார்க ளென்பது முன் னிரண்டடிக் கருத்து. முன்பு, தேவ சாதி, மனித சாதியினும் சிறந்ததா யிருந்தது: இப்போது, அத் தேவருள் முதல்வரான முத்தேவர் இரு மனிதரா யிருப்பதனால், தேவ சாதியி னும் மனித சாதி சிறந்ததாய்விட்ட தென்பது பின் னிரண்டடிக் கருத்து. முத்தேவர் இரு மனிதரானா ரென்ற கருத்து, இதன் முன் (அனுமப் படலம் ௭-ம் கவியில்) அனுமான் 'தேவருக் கொருதலைவராம் முதற் றேவரெனின், மூவர்மற் றிவர்இருவர்' என இராம லக்குமணரைக் குறித்துக் கருதியதை அநுவதித்துப் பூரிப்பதாயிருத்தல் காண்க.

'அமரர்க் கெல்லாம் தேவர்தந் தேவர்' என்ற பாடங்கொண்டால், அதற்குத் தேவர்க ளெல்லாருக்கும் (மேலான) தேவர் (ஆன மூவர்)களுடைய தேவர் (ஆன முழுத்தனி முதற் கடவுள்) என்று பொருள் கொள்க.

'அமரர்க் கெல்லாம் தேவராந் தேவர்' என்பதன் பொருள் 'எல்லாத் தேவர்கட்கும் கடவுளாகிய முதற் கடவுளே (ஸ்ரீ மஹாவிஷ்ணுதாமே)' என்பது முந்திய உரை.

பாட பேதம்: தேவர்தந் தேவரென்றே: வந்த மானுயர் யாக்கை: வென்றதன்றே. (௬)

இராம சுக்கிரீவர் சிநேகம்

[ இராமன், இருக்குமிடத்தைக் கைந்நீட்டிக் காட்டி 'இங்கே யிருக்க' எனச் சுக்கிரீவன் இருந்தான். இராமச் சந்திரனும் சூரிய புத்திரனும் சந்தித்த காட்சி, அமாவாசையன்று சந்திர சூரியர் சந்தித்த தோற்றம் போன்றது. அவர்கள் இருவரும் இணங்கி இணைந்திருத்தல், இராக்கதர் கூட்டமான பாவ இருள் நீங்க, அவ் விருளால் அடங்கி ஒடுங்கியிருந்த தேவர் கூட்டமான புண்ணிய ஒளி ஓங்க நன்னாளும் நல்லோரையும்* ஒன்றுகூடுதல் ஒத்தது. ]

* ஓரை - இராசி.

7. கூட்டமுற் றிருந்த வீரர் குறித்ததோர் பொருட்கு முன்னாள்
ஈட்டிய தவமும் பின்னர் முயற்சியு மியைந்த தொத்தார்
மீட்டும்வா ளரக்க ரென்னுந் தீவினை வேரின் வாங்கக்
கேட்டுணர் கல்வி யோடு ஞானமுங் கிடைத்த தொத்தார்

கொண்டுகூட்டு: *கூட்டம் உற்று இருந்த வீரர், குறித்தது ஓர் பொருட்கு, முன் நாள் ஈட்டிய தவமும் பின்னர் (செய்த) முயற்சியும் இயைந்தது ஒத்தார்: மீட்டும், வாள் அரக்கர் என்னும் தீவினையை வேரின் வாங்கக் கேட்டு உணர் கல்வியோடு ஞானமும் கிடைத்தது ஒத்தார்.*

பொருள்: *சிநேகராய்ச் சேர்க்கையுற்றிருந்த இராம சுக்கிரீவர், ஒருவர் உத்தேசித்த ஒரு காரிய நிறைவேற்றத்துக்கு, அவர் முற்காலத்தில் (முந்திய சென்மத்தில்,) நோற்றுச் சம்பாதித்த புண்ணியமும், இக்காலத்தில் (இந்தச் சென்மத்தில்,) செய்த முயற்சியும், ஒன்றுகூடிய தொத்தார்கள்: பின்னும் எதனை யொத்தார்களென்றால், கொடிய இராக்கதரென்னும் பாவ (விருக்கத்தின் மேற்பாக)த்தை (அறுத்துத் தள்ளி, அடிப்பாகத்தை வெட்டி ஒழித்து) வேரோடழிக்க (விரும்பினோர்க்கு)க் கல்வியும் ஞானமும் (ஆகிய இரம்பமும் கோடரியும்) கிடைத்ததையும் ஒத்தார்கள் (என்க).*

*பரசுராமப் படலம் ௨௦-ம் கவியில் 'எண்ணிய பொருளெலாம் இனிது முற்றுக' என்பதிற்போல, இந்தக் கவியிலும் 'பொருள்' 'காரியம்' என்ற பொருள்பட நின்றது. ஈட்டல் - சம்பாதித்தல். வாளரக்கர் என்பதில் வாள் - கொடுமை; வாளரா என்பதிற் போல.*

*'கல்வியும் ஞானமும் கூடிய வழியே தீவினை யொழிதல் போலவும், ஊழ்வினையும் முயற்சியும் கூடிய வழியே ஒரு காரியம் முற்றுதல் போலவும், இவ்விருவரும் நண்பினராய்க் கூடியதனாலேயே ராக்ஷஸ ஸம்ஹாரம் நிறை வேறு மென்பதாம். உவமையணி'.*—வை. மு. கோ. (எ)

சுக்கிரீவன் இராமனைச் சரணடைதல்

[ *அப்போது, சுக்கிரீவன், இராமனை நோக்கி, 'உன்னை அடையப்பெற்ற என்னினும் புண்ணியர் எவருமிலர். எனது நல்வினைப் பயன் சருவலோக நாயகனாகிய உன்னை அடையும்படி எனக்கு உதவியது. விதியே உதவும்போது, பெறுவதற் கரியது எது*

*விருக்கிறது!' என்று, இதயமாரப் புகழ்ந்துரைத்தான். இராமன், 'நீ இந்த மலையி லிருக்கின்றாயென்று சவரியென்னுந் தவமுதியாள் சாற்றத் தெரிந்து, எங்கள் கவலை உன்னால் நீங்குமென்று இங்கே வந்தேம்' என்றான். சுக்கிரீவன், 'என் தமையன் வாலி, என்னைக் கொல்லுதற்கு ஓங்கிய கையினனாய், யான் உலகெங்கும் ஓடியும் விடாது தொடரத் தப்பிப் பிழைத்து, இந்த மலையில் வந்து சேர்ந் தேன். அவன் இங்கு வந்தால் நாசமடைவானென்ற சாப முளதாதலால், இதுகாறும் உயிரோடிருக்கிறேன். உன்னைச் சரணடைந் தேன். என்னைக் காப்பாயாக' என்றான்.* ]

8. என்றவக் குரக்கு வேந்தை யிராமனு மிரங்கி நோக்கி
உன்றனக் குரிய வின்ப துன்பங்க ளுள்ள முன்னாள்
சென்றன போக மேல்வந் துறுவன தீர்ப்ப லன்ன
நின்றன வெனக்கு நிற்கு நேரென மொழியு நேரா

9. மற்றினி யுரைப்ப தென்னே வானிடை மண்ணி லுன்னைச்
செற்றவ ரென்னைச் செற்றார் தீயரே யெனினு முன்னோ
டுற்றவ ரெனக்கு முற்றா ருன்கிளை யெனதென் காதல்
சுற்றமுன் சுற்ற நீயென் னின்னுயிர்த் துணைவ னென்றான்

கொண்டுகூட்டு: *('என்னைக் கா') என்ற அக் குரங்கு வேந்தை இராமன் இரங்கி நோக்கி,'உனக்குரிய இன்ப துன்பங்களுள்ளவைக(ளுள்ளே) முன் நாள் சென்றன போக; மேல் வந்து உறுவன தீர்ப்பல்; அன்ன நின்றன எனக்கும் நிற்கும் நேர்.' என மொழிநேரா,*

*'இனி மற்று உரைப்பது என்? வானிடை மண்ணில் உன்னைச் செற்றவர் என்னைச் செற்றார்; உன்னோடு உற்றவர் தீயரே எனினும் எனக்கும் உற்றார்: உன் கிளை எனது; என் காதல் சுற்றம் உன் சுற்றம்: நீ என் இன்உயிர்த் துணைவன்' என்றான்.*

பொருள்: *'என்னைக் காப்பாயாக' என்று சொன்ன சுக்கிரீவனை இராமன், மனம் இரங்கிக் கருணையோடு நோக்கி, 'உனக்குரிய இன்ப துன்பங்களுள் இதற்கு முன் நீ அனுபவித்துக் கழிந்தவை போகுக; இனிமேல் வரும் துன்பங்களை நீக்குவேன்; அவைகள் (தம்முள், ஒருகால், எவைகளேனும் நீக்கப்படாமல் எஞ்சிநின்றால் அப்படி) நின்ற துன்பங்கள் எனக்கும் உனக்கும் சமம். (அவற்றை நான் உன்னோடு பாதிபாதியாகப் பகுந்தனுபவிப்பேன்)' என்று*

**வாக்குத்தத்தம் அளித்து, (அதனை வலியுறுத்துவானாய்,) 'இனி வேறு கூறுவானேன்? விண்ணிலாயினும் மண்ணிலாயினும் வேறெங்காயினும் உன்னை வருத்திேனார் என்னை வருத்தினோராவர்; உன்னோடு இட்டராகச் சேர்ந்தோர் துட்டரேயாயினும் எனக்கும் இட்டராவர்: உன் உறவினர் என் உறவினராவர்; என் பந்துக்கள் உன் பந்துக்களாவர்: நீ என் பிராண சிநேகிதனாவாய்' என்றான்.**

குரங்கு வேந்து குரக்கு வேந்து என வலித்தல் செய்யுள்விகாரம். இராமனும் என்பதில் உள்ள உம்மை, பொருள் குறியாத இசைநிறை. போக - போகுக: வியங்கோள் வினைமுற்று: செய்ய என்னும் வாய்பாட்டு வினையெச்சமாகக் கொண்டு பொருள்கூறுவாரு முளர். நேரா - கொடுத்து. செறுதல் - வருத்துதல். 'செலினந்திற் செறிற் சாம்பும்' (கலித். 78)—த. அ.

'நின்றன(வான துன்பங்கள்) எனக்கும் நிற்கும் நேர் ( - சமம் - எனக்குப் பாதி உனக்குப் பாதி)' என்றது, 'துன்பம் அரையாம் துணைவரது கூட்டத்தால் - இன்பம் இரட்டியா மே' * என்ற கருத்துள்ள ஆங்கிலப் பழமொழியை நினைவுறுத்துகின்றது.

இராமன் செய்த சிநேக வாக்குத்தத்தத்தில் 'தீயரேயெனினும் உன்னோடுற்றவர் எனக்கும் உற்றார்' என்ற பகுதி, விவாதத்துக் கிடமானதாகத் தோன்றுகின்றது. 'உற்றவர்'க்கு முன் வரும் 'செற்றவ'ரையும் பின்வரும் 'கிளை'யையும் சுக்கிரீவனது செற்றவர் ( - வருத்துபவர்) ஆகவும், கிளை ( - சுற்றத்தார்) ஆகவும் விரும்பி ஆக்கிக்கொள்ளவில்லை. அவர்கள், அவன் விருப்பத்தாலல்லாமற் செற்றவரும் கிளையும் ஆனவர். அவ்வாறன்றி, 'உற்றவர்' (-சிநேகிதர்) அவன் விருப்பத்தால் உற்றவராக்கிக்கொள்ளப்பட்டு அவனுக்கு உற்றவராயுள்ளவர். இராமன் அவனை நண்பனாக ஆக்கியது போல ஆக்காதிருத்தலுமாமே யன்றி, ஆக்கியபின் 'நட்டபின் வீடில்லை † நட்பாள்பவர்க்கு' ‡ என்பதனால் விலக்குதல் அறமாகாது. அதே நியாயத்தால் சுக்கிரீவனும் அவனால் நண்பினராக்கப்பட்டாரை விலக்குதல் கூடாமை தெளிவாம். அவன் ஆராய்ந்து துணிந்து தக்காரையே நண்பராகக் கொண்டிருப்பான். அப்படிக் கொளப்பட்ட நண்பினர், ஒருகால், தீயராயிருந்தாலும், அதனைத் தெய்வத்தால் வந்த கேடுபோலக் கருதி, அவரைத் தான் விலக்காமை சிநேக தருமமென்பது குறிக்கத் 'தீயரே யெனினும் உன்னோடுற்றவர் எனக்கும் உற்றார்' என்றானெனலாம். இந்த உலகத்தில் தீமை கலவாத சுத்த நன்மையுமில்லை, நன்மை கலவாத சுத்தத் தீமையுமில்லை யென்றும்,

---

* அகலிகை வெண்பா. † வீடு - விடுதல். ‡ குறள் 791.

குணம்நாடிக் குற்றமும் நாடி அவற்றுள்
மிகைநாடி மிக்க கொளல்

என்றவாறு நன்மைமிக்காரை நல்லவரென்றும் தீமைமிக்காரைத் தீயவ ரென்றும் கொள்வது அறிவுடைமை யென்றும், சுக்கிரீவனும் அவனைச் சேர்ந்தவர்களும் மொத்தத்தில் நல்லவரென்று கருதிச் சுக்கிரீவனுடன் சிநேகஞ்செய்த இராமன், சுக்கிரீவனோடு சேர்ந்தவர்களுள் நல்லோர் பெரும்பான்மையராகவும் தீயோர் சிறுபான்மையராகவும் இருப்பரென்றும், அவர்களுள் நல்லோரை மட்டுங் கொள்ளலும் தீயோரைத் தள்ளலும் செய் யாமல் எல்லோரையும் கொள்ளல் தகுதி யென்றும், மனத்துட்கொண்டு, 'தீயரே யெனினும் உன்னோ டுற்றவர் எனக்கும் உற்றார்' என்றா னெனலு மாம். தன் மனைவி சீதையைப் பகையரசன் கவர்ந்து மறைத்து வைத் திருக்கு மிடத்தைக் கண்டுபிடித்து அவனை வென்று அவளை மீட்பதற்கு உதவியாக இராசதந்திர முறையிற் சுக்கிரீவனைச் சிநேகிதனாகக்கொண்ட இராமன் அவ் விராசதந்திர முறைப்படியே, 'தீயரே யெனினும் உன்னோ டுற்றவர் எனக்கும் உற்றார்' என்றா னெனலுமாம்.

சுக்கிரீவன் 'மாற்றானெனத் தம்முனைக் கொல்லிய வந்து நின்றான் — வேற்றார்கள் திறத்திவன் தஞ்சம் என் வீர'* என்ற இலக்குமணன் வினா வுக்கு விடையாக, இராமன், 'பெற்றாருழைப் பெற்ற பயன்பெறும் பெற்றி யல்லால் — அற்றார்நவை யென்றலுக் காருநர் ஆர்கொல்' என்றான் † என்ப தனால் மேலே கூறிப்போந்தவை பொருத்தமானவை யென்பது போதரும்.

இராம சுக்கிரீவர் நட்பு, பரஸ்பர காரியோத்தேசமானதாய்ப் பயன் கருதியதாதலால், காமிய சிநேகமாகவும், இராம குகர் நட்பு நிஷ்காமிய சிநேகமாகவும் இருத்தல், இராமன் சுக்கிரீவனுக்குச் சொன்ன இந்த இரண்டு பாட்டுடன் அவன் குகனுக்குக் கூறிய,

'என்னுயி ரனையாய்நீ இளவல்உன் இளையான்இந்
நன்னுதல் அவள்நின்கேள் நளிர்கடல் நிலமெல்லாம்
உன்னுடை யதுநான்உன் தொழில்உரி மையினுள்ளேன்' ‡

என்ற பாட்டுப்பகுதியை ஒப்பிட்டுப் பார்ப்பதனால் அறியலாம். (அ, க.)

## வாலி சுக்கிரீவர் பகைமை வரலாறு

[ இராமன் சுக்கிரீவனுக்குச் சிநேக வாக்களித்ததைத் தெரிந்து, இராமவாக்கு, ஏகவாக்கு, வேதவாக்கினும் மெய்ம்மை மிக்கது என்று வானரசேனை குதுகலித்து ஆரவாரஞ் செய்தது.

* வாலி வதைப் படலம் கக. † வாலி வதைப் படலம் கடு.
‡ க. ரா. சா. அயோத்தியா காண்டம், பாட்டு 96.

அனுமான், ஆனந்த பரவசனு யெழுந்து, அஞ்சலியத்தனுய் நின்று, 'வாழி! மன்னவர் மன்னவ! நீயும் நின் தோழனும் வாழி! நீங்கள் இருவீரும் உங்கள் மாளிகையில் இனிது வீற்றிருத்தலை யாங்க ளெல்லாரும் கண்டு களிக்கவேண்டும். திருவுள்ளம் யாதோ?' என, இராமன், நல்லதென்று இலக்குமணனோடும் சுக்கிரீவனோடும் சென்று, சந்தனம் அகில் முதலிய தருக்கள் நெருக்கமாக உற, இடையிடையே பளிங்குப் பாறைகள் விளங்கப்பெற்ற சோலை நடுவேயுள்ள சுக்கிரீவன் வாசஸ்தலத்திலே அவனோடு சல்லா பித்து அளவளாவி இனிது வீற்றிருந்தான்.

பின்பு, இராமன், விருந்தருந்த இருந்தபோது, துணைவியோ டன்றித் தனியே உபசரிக்கும் சுக்கிரீவனை நோக்கி, 'நீயும் மனைவி யைப் பிரிந்திருக்கின்றாயோ?' என வினவினன். அப்போது அனுமான், அவ்வினவுக்கு அவன் விடை அளிப்பது அனுசித மென்பதுணர்ந்து எழுந்து, அஞ்சலியத்தனுய் நின்று கூறுவான்: 'உத்தமநீதியாய்! உனக்கு உரைப்பது ஒன்று உண்டு. உற்றுக் கேட்டருள். வாலி மகாபலசாலி. கயிலாயபதியின் கருணைத் துறையில் முழுகித் திளைப்பவன். தானவர் பெருங்கூட்டமும் வானவர் பெருங்கூட்டமும் தனித்தனியாகவும் ஒன்றுசேர்ந்தும் முயன்று பார்த்து முடியாதெனக் கைவிட்ட அமுதமதனத்தைத் தானொருவனே தனியாகச் செய்துமுடித்த திறமையுடையவன். தன்னை எதிர்த்தார் பலத்திற் சரிபாதி தன்னை அடையத் தைவிக* வரம் பெற்றவன். காற்றினும் கடுவேக முடையவன். அவன் மார்பில் அறுமுகன் வேல் செல்லாது. அவன் வால் செல்லாத இடத்தேதான் இராவணன் கோல் செல்லும். ஏனெனில், அவன் சிவபூசை செய்துகொண்டிருந்தபோது களவாகப் பின்புறத்தே சென்று பற்ற முயன்ற இராவணனை எளிதாகப் பிடித்து வாலிற் கட்டி இலகுவாகத் தூக்கிக்கொண்டு எங்குஞ் சஞ்சரித்த காலத்தில், வாலி வால் செல்லாத இடமுமில்லை; இராவணன் இரத்தம் சிந் தாத இடமுமில்லை. ஆதிசேடன் கிடந்து தாங்கும் பூமியை அவன் நடந்து தாங்கும் ஆற்றலான்.

'அந்த வாலி எங்கள் அரசனாக, இந்தச் சுக்கிரீவன் இளவரசாக இருந்த காலத்தில், இவர்களுடைய குலப்பகைஞனை மாயாவி

* தைவிக - தெய்வீக.

யென்ற அசுரன் வந்து வாலியோடு போர்புரிந்து வாலி தாக்குத லுக்கு ஆற்றாது தோற்றோடிப் பாதாளத்துள்ளே புகுந்தான். அப்போது வாலி சுக்கிரீவனைப் பிலத்துவாரத்தில் நிறுத்தி, "அவனைப் பிடித்துவருவேன். நீ சிறிதுபோது இங்கே காத்திரு" என்று சொல்லிவிட்டு உள்ளே போனான். போனவன் நெடுங் காலம் திரும்பாமையால், கலங்கிக் கண்ணீர் சொரிந்துகொண் டிருந்த இவனை நோக்கி, மந்திரிமார் முதலியோர், "உன் தமையன் இறந்தமையால் அரசுபுரிதல் உனது கடமை" என, "அது தவறு. யான் உள்ளே சென்று அவனைத் தேடிக் கண்டு கூட்டிவருவேன். அவன் கொல்லப்பட்டிருந்தால், கொன்றவனைக் கொன்று வருவேன். கொல்ல முடியாவிட்டால், இறந்துவிடுவேன்" என, "எங்களை நீ காவாயாயின், யார் காப்பார்? நீ காக்கக் கடவை" என்று வற்புறுத்தி அரசாட்சியை இவனிடம் அவர்கள் கொடுத்த துண்டு. இவன் (மனசோடு) கொண்டதில்லை.

'இவன் காத்திருந்த பிலத்துவார வழியே மாயாவி வந்து விடாமல் தடுக்க மலைகளை அடுக்கி அடைத்துவிட்டு, இவனைக் கூட்டிவந்து, இறைமை வகிக்கச் செய்து எங்கள் மலையில் யாங்கள் இருக்கையில், வாலி மாயாவியை மடித்துப் பாதாள வாயிலை அடுத்துத் தம்பியை விளித்துப் பிரதியுத்தரம் பெறாமையால், "தம்பி காத்த தன்மை நன்றாயிருந்தது!" என்று எண்ணி, அடுக்கிய மலைகளை உதைக்க, அவைகள் நெடுந்தொலை பறந்தொழிந்தன. அவன் கோபத்தோடு எங்கள் மலைமேல் ஏறிவர, இவன் எதிர் கொண்டு சென்று அடி பணிந்து நின்று, "மந்திரிகள் முதலியோர் வற்புறுத்தலை மறுக்கமாட்டாது, உன் காவலை யான் புரிந்தேன். என் பிழை பொறுத்து உன் காவலை ஒப்புக்கொள்" என்றதை ஏற்றுக்கொள்ளாமல், சீற்றம் மிகுந்து, இவனைத் தாக்குவானாகிக் கடல் கடைந்த கரதலங்களாற் குடல் கலங்க உடல் கடைந்திட, இவன் உலைந்து, இனி நின்றிடில் உயிர் சென்றிடுமென்று உலக முடிவுவரையும் விரைந்தோடியும், அவன் தொடர்ந்தோடிப் பற்றி மாய்க்கப் புக்கபோது, அற்றம் வாய்க்கப்பெற்றுத் தப்பிப் பிழைத்து, அவன் வராமல் தடுக்கும் சாபக் காப்புடைய இந்த மலையில் வந்து தங்கி யிறவாதிருக்கின்றான்.
]

**10.** உரிமை யென்றிவற் குரிய தாரமாம்
அரும ருந்தையு மவன்வி ரும்பினான்
இருமை யுந்துறந் திவனி ருந்தனன்
கரும மிங்கிதே கடவு ளென்றனன்

**கொண்டுகூட்டு :** *'கடவுள்! உரிமை என்று, இவற்கு உரிய தாரம் ஆகும் அருமருந்தையும் அவன் விரும்பினான். இருமையும் துறந்து, இவன் இருந்தனன். இங்கு கருமம் இதே' என்றனன்.*

**பொருள் :** *'சுவாமீ! (வாலி, சுக்கிரீவனுடைய செல்வத்தைக் கவர்ந்ததோடமையாமல், பொதுவாக உடையவனுக்கும் அவன் உறவினர் முதலியோர்க்கும் உரிமையாம் செல்வம்போலன்றிச் சிறப்பாக உடையவனொருவனுக்கே உரிமையாதல்பற்றி) உரிமை யென்று பெயர் வழங்கப்பெற்று, இவனுக்கு உரிமையாயுள்ள மனையாளாகிய ஆரமுதம் போல்பவளையும் அவன் காதலித்துக் கவர்ந்தான். செல்வமும் மனைவியும் ஆகிய பொருள்கள் இரண்டையும் ஒருசேர இழந்து, இவன் துன்பம் மிகுந்தவனாய் இருக்கின்றான். இந் நாட்டில் இவன் விஷயமாக நடந்த செய்தி இதுவே'.*

*உரிமை - மனைவி. இவற்கு - இவனுக்கு. தாரம் - மனைவி. மருந்து - அமிர்தம். 'விரும்பினான் - காரியம் காரணமாக உபசரிக்கப்பட்டது.' இருமை - இரண்டு. * துறத்தல் - நீங்குதல். கருமம், காரியம், செய்தி, வரலாறு, சங்கதி என்பன ஒருபொருள் குறிப்பன. கடவுள், அண்மைவிளி; பெரியாரை மரியாதையாகச் 'சுவாமி' யென விளித்தலை உணர்த்தி நின்றது. உருமை யென்ற பாடங் கொண்டால் ருமை சுக்கிரீவன் மனைவியின் பெயர். 'ரோமம்' உரோமம் எனப்படல்போல, 'ருமை' உருமை யெனப்பட்டது.*

*கங்கைப் படலம் ௩அ-ம் கவியில், குகன் இலக்குமணனை நோக்கிச் 'சுவாமியே' என்ற மரியாதை விளிப் பொருள்படத் 'தேவா' என்றது போல, இங்கே அனுமான் இராமனை நோக்கிக் 'கடவுள்' என்றான்.*

*அருமருந்தையும் என்பதில் உள்ள உம்மை, ஒரு பொருளுங் குறியாது ஓசை நிரப்புவதாகக் கொண்டால், இசைநிறையாம்; மனைவியின் சிறப்பை யுணர்த்துவதாகக் கொண்டால், உயர்வு சிறப்பும்மையாம்; 'செல்வத்தைக் கவர்ந்ததல்லாமல்' என்பதை வருவித்தால், இறந்தது தழீஇய எச்சவும்மையாம்.*

---

* குறள் உக உரை.

வாலிக்குச் சுக்கிரீவன் தம்பியாயினும் குடியென்பதனுலும், குடிகளின் உடைமைகள் அரசன் உடைமைக ளென்பதனுலும், இவன் செல்வத்தை அவன் கைப்பற்றினு னென்ற போலி நியாயம் ஒருபுற மிருக்க, அவன் பாதாளத்துள்ளிருந்த தன்னை வெளியே வரவொட்டாமற் கனத்த மலைகளாற் பிலத்துவாரத்தை அடைத்துத் தன் இராச்சியத்தை இவன் தீய கருத்துடன் கைக்கொண்டா னென்று எண்ணியது உண்மைக்கு மாருயினும், அவ் வெண்ணங் காரணமாக அவன் இவன் செல்வத்தைப் பறித்துக்கொண்டத ஞல், அச் செய்கை அவன் மனமறியச் செய்த அநியாயமாகா தெனினும், அவன் இவன் மனைவியை வௌவியது அநியாய மாகாதுபோகா தென்பதனை வற்புறுத்த, அவன் இவன் பத்தினியை அபகரித்தா னென்று வெறுமனே * கூருமல், 'உரிமை யென்றிவற் குரிய' என்ற விசேடணத்தோடு கூடிய தாரத்தைக் கவர்ந்தா னென்ருன்.

அவ்விசேடண விளக்கம் வருமாறு :— ஓர் அரசனுடைய குடிகளின் பொருள்கள், அவனுடைய பொருள்களென, உண்மையாகவோ உபசார மாகவோ உரைப்பதுண்டு. ஆயினும், அப்பொருள்களுள்ளே, ஒரேஒரு பொருள்மட்டும், உபசாரமாகவும் அவனுடைய பொருளாகாமல், அவ் வொரு பொருளையுடையா னொருவனுக்கே உரிமையாம் ஒழிபு விதிபற்றி 'உரிமை'† யென்று கூறப்படுதல் மரபு. அவ் வொருபொருள் மனைவி யென்பது கூரு மலே விளங்கும். குறள் கசக-ல் 'பிறன்மனை' 'பிறன்பொருள்' என்று கூறப்படுதல் காண்க.

'உருமை' என்ற பாடங்கொண்டாலும், 'உரியதாரம்' என்பதில் உள்ள உரிய என்பது மேலே விரித்துக் கூறிய விசேடவுரைக்கு இடந் தந்து நிற்றல் காண்க.

பாட பேதம் : உருமை. (௪௦)

[ வாலி சுக்கிரீவர் வரலாறு கேட்டுக்கொண்டிருந்த இராமன், அவன் இவன் மனைவியைக் கவர்ந்தா னென்ற வார்த்தை காதில் வீழ்தலும் கடுஞ்சினங் கொண்டான். ]

வாலியின் செய்கைக்கு இராமன் சகியாமல் மனம் தபித்தல்

**11.** ஈர நீங்கிய சிற்றவை சொற்றன ளென்ன
ஆரம் வீங்குதோட் டம்பிக்குத் தன்னர சுரிமைப்
பார மீந்தவன் பரிவில னொருவன்ற னிளையோன்
தாரம் வௌவின னென்றசொற் றரிக்குமா றுளதோ

* வெறுமனே - வாளா - சும்மா—பதிற்றுப்பத்து. † உரிமை - மனைவி.

கொண்டுகூட்டு: ஈரம் நீங்கிய சிற்றவை சொற்றனள் என்னத், தன் அரசு உரிமைப் பாரம், ஆரம் வீங்கு தோள் தம்பிக்கு ஈந்தவன், (தன்போலும் தமையன்) ஒருவன் பரிவிலன் (ஆகியும் அமையாமல்) தன் இளையோன் தாரம் வெளவினன் என்ற சொல் தரிக்குமாறு உளதோ!

பொருள்: ('உன் அரசை உன் தம்பிக்குக் கொடு' என்று தந்தை சொன்னானென்றல்லாமல், தாய் சொன்னாளென்றுமல்லாமல், சிறிய தாயருள்ளும் பாலைவனம் போல ஈரமில்லாத) அன்பற்ற சிறியதாய் சொன்னாளென்று, (சேட்டபுத்திர பரம்பரைப் பாத்தியமாய்த்) தனக்கே உரிமையான இராச்சியத்தைத் தன் தம்பி பரதனுக்கு மனங்களித்துக் கொடுத்த சகோதர வாஞ்சை மிக்க இராகவன், தன்போலும் தமையன் ஒருவன், அவன் தம்பிக்கு அன்பில்லா னென்மையோ டமையாமல், கொடுமை செய்வானென வழியும், அறக்கொடிய செயலாக அவனுடைய தம்பி மனைவியை அபகரித்தா னென்ற வார்த்தையைக் கேட்டுச் சகித்திருக்குந் தன்மை அறவே இல்லையாகுமே யன்றி உள்ளதாகுமோ!

ஈரம் - அன்பு. சிற்றவை - சிறு அவ்வை - சிறிய தாய் (ஆன கைகேயி). ஆரம் - மாலை. வீங்குதல் - மிகுதல். ஆரம் வீங்குதோள் தம்பி - (பூமாலைகள் இரத்தின மாலைகள் ஆன) மாலைகள் மிகு(ந்தணி)ந்த தோளையுடைய தம்பியாகிய பரதன்). ஆரம், சந்தனக் குழம்புமாம். பரிவு - அன்பு.

மந்தரையின் துர்ப்போதனைக் குள்ளாகுமுன் அன்புடையாளா யிருந்த கைகேயி அப் போதனையால் அன்பு நீக்கினா ளென்பது குறிக்க 'ஈரம் இன்றிய சிற்றவை' யென்னாது, 'ஈரம் நீங்கிய சிற்றவை' யென்றா ரென்னலாம். அவள் அன்பு நீங்குமுன் 'தம்பிக்கு அரசைக் கொடு' என்று சொல்லியிருந்தாலும் கொடுக்கக்கடவ தல்லாத அரசை அன்பு நீங்கியபின் 'கொடு' எனக் கொடுத்தது மிக்க பெருந்தகைமை யென்பது குறிப்பு.

பாட பேதம்: நீங்குதோ ளிளவற்கு மன்னரசு. (கக)

## இராமன், 'வாலியைக் கொல்வேன்' என, சுக்கிரீவன் மகிழ்தல்

[ இராமன், சுக்கிரீவனை நோக்கி, 'உலகத்து வீரரெல்லாரும் ஒருங்கு சேர்ந்து அவனுயிரைக் காப்பாராலும் அவர்களோடு அவனைக் கொன்று உன் மனைவியை இராச்சியத்தோடும் சேர்த்துத் தருவேன். அவனைக் கொல்ல அவன் இருக்குமிடத்தைக் காட்டு' என்று சொன்னான். ]

**12.** எழுந்து பேருவ கைக்கடற் பெருந்திரை யிரைப்ப
அழுந்து துன்பத்துக் கக்கரை கண்டன னனையான்
விழுந்த தேயினி வாலிதன் வலியேன விரும்பா
மொழிந்த வீரற்கியா மெண்ணுவ துண்டேன மொழிந்தான்

கொண்டுகூட்டு : *அனையான், பேர் உவகைக் கடல் பெருந்திரை எழுந்து இரைப்ப, அழுந்து துன்பத்துக்கு அக்கரை கண்டனன். 'இனி வாலி தன் வலி விழுந்ததே(யாம்)' என, விரும்பா மொழிந்த வீரற்கு 'யாம் எண்ணுவது (ஒன்று) உண்டு' என மொழிந்தான்.*

பொருள் : *சுக்கிரீவன், பேரானந்த சமுத்திரத்தின் பேரலைகள் எழுந்து ஒலிக்கா நிற்க, (அவ் வொலி காதில் விழக் கேட்டுக் களித்துக் கண்ணால் தான்) அழுந்திக் கிடந்த பெருந் துக்க சமுத்திரத்தின் கரையைக் கண்டான். கண்டு, இனி வாலியின் வலிமை அழிந்ததேயாம் என்றெண்ணி, 'வாலியைக் கொல்வே னென்று' வாக்களித்த இராமனை நோக்கி, 'யாங்கள் ஆலோசிக்க வேண்டுவது ஆகிய விஷயம் ஒன்று உளது' என்று சொன்னான்.*

*இரைத்தல் - ஒலித்தல். 'அழுந்து' என முன்னும் 'அக்கரை' எனப் பின்னும் வரலால் 'துன்பம்' துன்பக்கடலை உணர்த்தியது. அனையான் - அவன் - சுக்கிரீவன். அக்கரை என்பதில் அகரம் தூரப்பொருளைச் சுட்டும் இடைச்சொல். விரும்பா - அன்புகூர்ந்து. வீரற்கியாம் என்பதில் இகரம் குற்றியலிகரம்.*

*சுக்கிரீவன் தன்னுடைய நாட்டையும் நாயகியையும் நீங்குமுன் இருந்த நிலை துக்கசாகரத்தின் இக்கரையாக, துன்புற்றிருந்த நிலை துக்க சாகரத்தில் அழுந்திய நிலையாக, இராமனால் துன்பம் நீங்கி இன்பம் எய்து மென்று தெரிந்த நிலை ஆனந்த சமுத்திர ஆரவாரம் காதில் வீழத் துக்க சாகரத்தின் அக்கரையைக் கண்ணாற் கண்ட நிலையாகத், துன்பக் கடலின் அக்கரையும் இன்பக் கடலின் இக்கரையும் ஒரே கரை அல்லது ஒன்றுக் கொன்று நெருங்கியவை யென்று கொள்ள, வெறுமனே 'கரை கண்டனன்' என்னாது 'அக்கரை கண்டனன்' என்றா ரென்னலாம்.*

*'விழுந்ததே இனி வாலிதன் வலி' என்றது, சுக்கிரீவன் மனத்தில் வாலி கொல்லப்பட்டுவிடுவா னென்ற நம்பிக்கை யுண்டானதைக் குறித்தது. விழப்போவதை விழுந்ததாகக் கூறியது, துணிபுபற்றி அல்லது தெளிவுபற்றி அல்லது இரண்டும்பற்றி எதிர்காலத்தை இறந்தகாலமாகக் கூறியதாமென்க.*

அந்த நம்பிக்கை யுண்டானபின், வாலியைக் கொல்லும் வல்லமை இராமனுக்குள்ளதோ என்ற சந்தேகம் உண்டாக, அதனை வெளிப்படக் கூறுதல் அநாகரிகமும் அவமரியாதையு மாமென்றும், இராமனை விட்டு நீங்கி அனுமானாதியரோடு தனியேயிருந்து ஆலோசிக்கவேண்டு மென்றும், ஆலோசனையின் முடிவுக்கேற்ப 'வாலி யிருக்குமிடத்தைக் காட்டு' என்ற இராமன் மொழிக்கு எதிர்மொழி இயம்பவேண்டு மென்றும், மனத்துள் எண்ணியதைச் சாதுரியமாக வெளியிடுவானாய், 'யாம் எண்ணுவதுண்டு' என்றா னென்றார். சிறு சிறு மொழிகளான மூன்றே மொழிகளால் மேற் கூறிய விரிந்த கருத்துக்கள் முழுதும் உய்த்துணரவைத்த கவி சாதுரியம் கவனிக்கத்தக்கது.

இக் கவியின் முன் னிரண்டடிகள் பெருவியப்பு விளைத்துப் பேரின் பம் பயக்கும் சிறந்த கருத்துக்கள் திகழ்பவை. சுக்கிரீவன், வாலி கொடு மையால் நாட்டினின்று துரத்துண்டு மனைவியைப் பறிகொடுத்து வருந்திப் பெருந்துன்பமுற்றுத் தன் துன்பத்துக்கு முடிவில்லையென்ற ஏக்கத்துட னிருக்கின்றான். அந் நிலையிலுள்ளவனுக்கு 'வாலியைக் கொன்று மனைவியை இராச்சியத்துடன் தருவேன்' என்று இராமன் வாக்களித்தத னால், முதலில் வாலி மாளுதலாகிய துன்ப நீக்கமும், அதனை அடுத்து மனைவி மீளுதலாகிய இன்பப் பேறும் எய்துதல் இனிய அலங்காரமாக விளங்கத், துன்பக்கடலுள் ஆழ்ந்து வருந்திக்கொண்டிருந்த சுக்கிரீவன் அதன் கரை யைக் காணும் அதிட்டமுற்றபோதே அதிட்டத்துக்குமே லதிட்டமாகத் துன்பக்கடற் கரையேறியவுடன் சந்தோஷத்துடன் தாவி வீழும் இன்பக் கட லிரைதலைக் கேட்டா னென்றார். இது, பாலகாண்டத்தில், பரசுராமப் படலத்தில் பரசுராமன் இரகுராமனைக் கொன்றுவிடுவா னென்ற பயத்தால் மூர்ச்சித்த தசரதன் இரகுராமன் கொல்லப்பட்டானில்லை யென்றும், பரசு ராமன் வெல்லப்பட்டா னென்றுந் தெரிந்து, துன்பம் நீங்கியபோதே இன்ப மெய்தியதை வியப்பும் நயப்பும் பயக்கக் 'குளிர்ப்பரும் துயர்க்கடற் கோடு கண்டவன், களிப்பெனும் கரையிலாக் கடலுள் ஆழ்ந்தனன்' என்றதை நினைப்புறுத்துகின்றது. (கஉ)

## இராமன் வல்லமையைச் சோதிக்க அனுமான் சுக்கிரீவனுக்குச் சொன்ன உபாயம்

[ இராமனை நீங்கி அனுமானாதிய அமைச்சருடன் சென்று சுக்கிரீவன் ஒரு தனியிடத் திருந்தபோது, அவனை நோக்கி அனு மான், 'உன் உள்ளத்துள்ளே உள்ளதை ஊகித்துணர்ந்தேன். அது, இவ்வீரர் அவ்வாலியை வெல்ல வல்லரோ என்ற ஐயமே. அவ் வையம் நீங்க, யான் கூறுவேன்; கேள். இராமனுடைய

கையிலும் காலிலும் சங்க சக்கர ரேகைகள் உள்ளன. அவன் திருமேனியில் புருடோத்தமனுக்குரிய அங்க லக்கணங்கள் அனைத்தும் அமைந்துள்ளன. சீதையின் பொருட்டு அரன் வில்லை முறித்த அரிய செயல் திருமாலா லாவதன்றி எவராலாகும்! தரைமீதே தருமத்தை நிலைநிறுத்த அவதரித்த திருமாலே இராமன். சிவதனுசை ஒடித்தது செவியுற்றதே யன்றிக் கண்ணுற்றதில்லை. அவன் வல்லமையை நேராகக் கண்கொண்டு கண்டு தெளியக் கருதுவாயேல், அதற்கோ ருபாய முளது. அது சமீபத்திலே உள்ள ஏழு மராமரங்களில் ஒன்றில் அவன் அம்பு உருவுவதாம்' என்றான். அது கேட்டுச் சுக்கிரீவன், 'இது, சந்தேகம் நீங்குதற்குத் தக்க உபாயம்' என்று உவப்போடுரைத்து, இராமனை அணுகி, 'யான் தெரிவித்துக்கொள்ளும் செய்தி யொன்றுளது' என, அவன் 'சொல்லுக' என்றான். ]

சுக்கிரீவன் இராமனை மராமரத்தை எய்ய வேண்டல்

13. ஏக வேண்டுமிந் நெறியென வினிதுகொண் டேகி
மாக நீண்டன குறுகிட நிமிர்ந்தன மரங்கள்
ஆக வைந்தினே டிரண்டினேன் றுருவநின் னம்பு
போக வேயென்றன் மனத்திடர் போமெனப் புகன்றான்

கொண்டுகூட்டு: 'இந்நெறி ஏகவேண்டும்' என (அவர்களை) இனிது கொண்டு ஏகி, நீண்டன (ஆன) மாகம் குறுகிட நிமிர்ந்தன (ஆன) மரங்கள் ஐந்தினொடு இரண்டு ஆக, ஒன்றை நின் அம்பு உருவப் போகவே என் மனத்து இடர் போகும்' எனப் புகன்றான்.

பொருள்: (சுக்கிரீவன், அநுமான் குறிப்பித்த ஏழு மரங்களிருக்குமிடத்துக்கு ஏகும் வழியை இராம லக்குமணர்க்குக் கைநீட்டிக் காட்டி), 'இந்த வழியே ஏகவேண்டும்' என்று விநயமாகக்* கூறி, அவர்களை இனிதாக அழைத்துக்கொண்டு போய், '(மேலும் கீழும் பக்கங்களும்) நீண்டனவான பத்துத் திக்குக்களும் குறுகியனவாம்படி (உச்சி மேல் நோக்கியும், வேர் கீழ் நோக்கியும், கிளைகள் பக்கங்க ளெல்லாவற்றையும் நோக்கியும்) நீண்டு வளர்ந்தனவான மரா மரங்கள் ஏழுள் ஒன்றை உன் அம்பு உருவிப் போகவே, என் மனத்துன்பம் ஒருவிப்†போகும்' என்றான்.

---

* விநயம் - மரியாதை; புத்தி நுட்பம். † ஒருவி - நீங்கி.

நெறி - வழி. மாகம் - திக்கு: 'மாகம் நீள் விசும்பிடை' சிந்தா. 569. நிமிர்தல் - நீளல்—த. அ. - நீண்டு வளர்தல். ஆக - ஆகத்தொகை - மொத்த மாய்—த. அ. ஐந்திரேடு இரண்டு - ஏழு. இடர் - துன்பம். 'உருவ' எச்சத்திரிபாய் 'உருவி' எனப் பொருள்கொள நின்றது. 'உருவ' என்ப தற்கு உருவும்படி என்றும் பொருள் கூறலாம்.

இந் நெறி ஏகவேண்டும் எனவும், நீண்டன (ஆன) மாகம் குறுகிட நிமிர்ந்தன (ஆன) மரங்கள் எனவும், நின் அம்பு உருவ எனவும் இயைத்துப் பொருள்கொள்ளப்பட்டிருப்பது காண்க.

'மாகம் நீண்டன குறுகிட நிமிர்ந்தன மரங்கள் ஆக ஐந்திரேடிரண் டின் ஒன் றுருவ' என்பதற்குப் 'பெரிய ஆகாயத்தை அளாவி உயர்ந்தவை யும் (அவ் வாகாயமும்) சிறியதாம்படி பரந்து வளர்ந்தவையுமாகிய மரா மரங்கள் ஏழிலும் ஒருங்கு துளைக்கும்படி' என்பது முந்திய உரை. 'மாகம்' என்பது அவ்வுரையில் ஆகாய மென்றும் இவ்வுரையில் திசைக ளென்றும் பொருள் கூறப்பட்டிருத்தல் கவனிக்கத்தக்கது. 'ஒன் று' என்பதற்கு அந்த உரையில் ஒருங்கு என்ற அரும்பொருளும் இந்த உரையில் ஒன்று என்ற செம்பொருளும், கொள்ளப்பட்டிருத்தலும் குறித்தற்குரியது.

முந்திய உரைப்படி ஏழு மரங்களையும் உருவ அம்பெய்யும்படி சுக்கிரீ வன் இராமனை வேண்டினவனு யிருந்தால், ஏழு மரங்களும் துளைபட்ட போது, அவனுக்கு உண்டாம் வியப்பினும், இந்த உரைப்படி ஒன்றை உருவ எய்யும்படி வேண்டினவனு யிருந்தால் உண்டாம் வியப்பு மிகப் பெரியதா யிருக்கு மென்பது கூறுமலே விளங்கும்.

வான்மீகத்தில் சுக்கிரீவன் இராமனை நோக்கி, 'நீர் இவ்வாச்சா மரங் களி* லொன்றைத் துளைப்பீராகில் உம்முடைய பலம் இவ்வளவென்பதை நான் அறிந்துகொள்வேன்' என்று கூறியதாகக் கூறியிருத்தல் காண்க.† (கரு)

இராமன் மராமரங்களி னருகே எய்துதல்

[ மேற்கூறியவாறு கூறிய சுக்கிரீவனது உட்கருத்தை இராமன் தெரிந்து, சிறுநகைசெய்து, எய்யச் சித்தமாக வில்லை நாணேற்றி, அந்த மரங்களின் அருகே போய்ச் சேர்ந்தான். ]

---

* ஆச்சாமரம் - மராமரம்.

† வான்மீகி ராமாயண வசனம், கிஷ்கிந்தா காண்டம் 11-ம் சருக்கம். —பண்டித நடேச சாஸ்திரியார்.

## 4. மராமரப் படலம்

[ இராமன் எய்து துளைத்த ஏழு மராமரங்களைப்பற்றிக் கூறுவது ] *

### மராமர வருணனை

**14.** ஊழி பேரினும் பேர்வில வுலகங்க ளுலைந்து
தாழுங் காலத்துந் தாழ்வில தயங்குபே ரிருள்சூழ்
ஆழி மாநிலந் தாங்கிய வரும்பெருங் கிரிகள்
ஏழு மாண்டுசென் றொருவழி நின்றென வியைந்த

**கொண்டுகூட்டு :** *(மராமரங்கள்) ஊழி பேரினும் (தம் நிலை) பேர் வில; உலகங்கள் உலைந்து தாழுங் காலத்தும் தாழ்வில; தயங்கு பேர் இருள் சூழ் ஆழி மா நிலம் தாங்கிய அரும் பெரும் ஏழ் கிரிகளும் ஆண்டு சென்று, ஒரு வழி நின்றென, இயைந்த.*

**பொருள் :** *(இராமன் அணுகிய ஏழு மராமரங்கள், ஒரு கற்பம் கழிதலும் மறு கற்பம் வருதலுமாகக்) கற்பங்கள் மாறி, மற்றெல்லாப் பொருள்களும் நிலைமாறினாலும், தம் நிலை மாறுதலில்லாதவைகள்; கற்பமுடிவிற் கடல் கரை கடந்து பெருகுதலால் உலகம் நிலை குலைந்து கடல் நீருள் முழுகித் தாழுங் காலத்திலும் முழுகாமல் அந் நீர்க்கு மேற்பட்டு நின்று தாழ்தலில்லாதவைகள்; அரிய பெரிய ஏழு குலபருவதங்களும், தாம் நின்ற இடங்களை விட்டு அவ்விடத்தில் வந்து, ஒருசேர நின்றாற் போல, உயரமும் பருமையும் மிகவும் அதிகமாகப் பொருந்தியன.*

*ஊழி - கற்பம். உலகங்கள் என்பதில் கள் அசை. உலகம் - (வருணிக்கப்படாநின்ற மராமரங்கள் நிற்கும்) பூமி. தயங்குதல் - திகைத்தல். ஆழி - சக்கரம்; ஆகுபெயராய்ச் சக்கரவாளகிரியை யுணர்த்தி நின்றது. மா நிலம் - பெரிய பூமி. தயங்கு பேர் இருள்சூழ் ஆழி மா நிலம் - திகைக்கும்படியான மிகுந்த இருள் சூழ்ந்த சக்கரவாள பருவதம் (சுற்றெல்லையாகச்) சூழ்ந்த பெரிய பூமி. ' "பேரிருள்" என்றது சக்கரவாள பருவதத்துக்கு அப்பாலுள்ள காடாந்தகாரத்தை.' ஏழு கிரிகள் சத்தகுல பருவதங்களெனப்படுவன. அவை கைலை, இமயம், மந்தரம், விந்தம், நிடதம், ஏமகூடம், கந்தமாதநம் என்பன. ஆண்டு - அவ்விடம் - அம் மரங்கள் உள்ள*

---

* **ஆச்சாமரம், சாலமரம், மராமரம் என்பவை ஒருபொருள் குறித்தவை.**

வனம். ஒருவழி - (அவ்வனத்தில்) ஒரு (குறித்த) இடத்தில். மலைக்குப் பூதரம் (பூ - பூமி; தரம் - தாங்கல்) என்ற பெயருண்மையை 'நிலம் தாங்கிய கிரி' என்றது நினைவுறுத்துகின்றது.

'பேர்வில' என்பதற்கு 'இடம் விட்டுப் பெயர்தல் இல்லாதவை' என்பதும், 'உலைந்து தாழுங் காலத்துந் தாழ்வில' என்பதற்கு 'அழிந்துபோகுங் காலத்திலும் விழுதல் இல்லாதவை' என்பதும் முந்திய உரை.—**வை.மு.கோ.**

இந்தக் கவியும் இதனை அடுத்து வருங் கவிகளும், இராமன் வல்லமையை மேம்படுத்தற்கு அவன் எய்து துளைத்த ஏழு மரங்கள் சாலப் பெரியவையும் வலியவையுமானவை யென்று கூறுவனவாய், உயர்வுநவிற்சியாயுள்ளவை. **தன்மைநவிற்சியணியின்** சார்பினராய் **உயர்வுநவிற்சியணியை** வெறுப்பார் மிகப் பலருளராய இக் காலத்திற் கவனிக்க வேண்டியதொன்றுண்டு. அது, களிப்பு விளைக்கும் கவி சாதுரியத்தோடு கூடியது தன்மைநவிற்சியாயினும் உயர்வுநவிற்சியாயினும் ஏற்றுப் போற்றுதற்குரியது; அச் சாதுரிய மில்லாதது எதுவாயினும் புறக்கணித்தற்பால தென்பது.

இக் கவிகளிற்போல அபரிமித அதிசயமும் ஆனந்தமும் விளைய விருக்கங்கள் விதந்துரைக்கப்பெற்றமை வேறு தமிழ்நூ லெதனிலேனும் பிற மொழி நூ லெதனிலேனும் உளதோ வென்பது சந்தேகம்.

கவி, இராமன் எய்தற்கு எய்திய ஏழு மராமரங்களுக்கும் ஏற்ற உவமை மலைகளேயாமென மனத்துட் கருதினர். கருதியவர் ஏழென்னும் எண்ணையுடைய அம் மரங்கள்போல, அவ்வெண்ணுடைய மலைகளிருந்தால், அவை உவமித்தற்குச் சிறப்பாயிருக்குமென்று சிந்தித்தார். சிந்தித்தவர், சத்தகுல பருவதங்கள் ஞாபகத்துக்குவர, அவைகளை அம் மரங்களுக்கு உவமையாக உரைக்க உன்னினர். உன்னியவர், ஏழு மரங்கள் ஓரிடத்திருக்க, ஏழு குல மலைகள் வெவ்வேறிடத்திருக்கும் பொருத்தக் குறைவு புலப்பட, அக் குறையை நிரப்புவாராய், இல்பொரு ளுவமையாக, அந்தச் சத்தகுலாசலங்கள் தாம் நின்ற இடங்களி னின்று பெயர்ந்துசென்று ஓரிடத் துற்றன போன்றன வென்றார்.

மரங்களுக்கு மலைகளை ஒப்பாக உரைத்தவர், மலைகளின் அடிப்பாகம் பாறையாயிருப்பது மரங்களின் அடிப்பாகத்துக்கும், பைஞ்சோலைகளையுடைய மலைகளின் மேற்பாகம் பச்சிலைக் கிளைக அடர்ந்த மரங்களின் மேற்பாகத்துக்கும், ஒத்திருக்கும் காட்சி உளக்கண்ணெதிரே உதயமாக, அதனைக் கற்பனைசக்தியாற் புனைந்துரைப்பாராய் அடுத்த கவி கூறுகின்றார்.

**பாட பேதம்:** பேர்வினும்: தயங்குபே ரருளால்: குல கிரிகள்: நின்றென வியந்தான். (கச)

15. கலைகோண் டோங்கிய மதியமுங் கதிரவன் றனும்
தலைகண் டோடுதற் கருந்தவந் தொடங்குறுஞ் சாரல்
மலைகண் டோமென்ப தல்லது மலர்மிசை யயற்கும்
இலைகண் டோமெனத் தெரிப்பருந் தரத்தன வேழும்

கொண்டுகூட்டு: (அவை) ஏழும், 'கலைகொண்டு ஓங்கிய மதியமும் கதிரவனும் (தன்) தலை கண்டு ஓடுதற்கு அருந்தவம் தொடங்குறும் சாரல் (ஒரு) மலை கண்டோம்' என்பது அல்லது, 'இலை(யுடைய மரங்) கண்டோம்' என, மலர்மிசை அயற்கும் தெரிப்பு அரும் தரத்தன.

பொருள்: அந்த மரங்கள் ஏழும், 'சந்திரனும் சூரியனும் தனது* உச்சியைக் கண்டு செல்லுதற்குத் தவம் செய்யத் தொடங்கும் அடிவாரத்தையுடைய ஒரு மலையைப் பார்த்தோம்' என்று சொல்லுவதே யல்லாமல், 'இலையை யுடைய மரத்தைப் பார்த்தோம்' என்று பிரமதேவனும் சொல்லுதல் கூடாத உயர்வுடையனவாக ஒவ்வொன்றும் உள்ளன.

சாரல் - மலையடிவாரம். அயன் - பிரமன். தெரிப்பரும் என்பதில் அருமை கூடாமையைக் குறித்தது. தரம் - உயர்வு.—இ. அ. தரம், தன்மை யென்பது முந்திய உரை.

பிரமதேவன், இராமன் எய்யக் கருதிய ஏழு மராமரங்களுள் ஒன்றைப் பார்ப்பானுனல், அவன் அதன் அடிப்பகுதியை மட்டும் காணமுடியும். கண்டு, அந்த அடிப்பாகத்தை மலையென்று மயங்குவான். மயங்கி, அந்த மலை சந்திர சூரியர் செல்லும் வானவீதிக்கு மிகவும் உயர்வாயிருப்பதால், அச் சந்திர சூரியர் அதன் உச்சியைக் காணப்பெறுதல் புகழ்ச்சிக்குரியதென்றும், அக் கருத்துத் தவஞ்செய்தாலன்றி நிறைவேருதென்றும், தவஞ்செய்தற்குத் தக்க தானம் அம் மலைச்சாரலே யென்றும் எண்ணித் தவஞ்செய்யும் படியான தன்மையுடையது அந்த மலையென்று கருதுவான். அந்தப் பிரமதேவன் எந்த மரத்தின் அடிப்பாகத்தைப் பார்த்து இவ்வாறு கருதுவானே, அந்த மரத்தின் இலை(களோடு கூடிய கிளை)களைக் காணுதலால், அம் மரத்தைப்பற்றிப் பேசுங்கால், 'மலையைக்கண்டோம்' என்பானே யன்றி 'மரத்தைக் கண்டோம்' என்னுன். அப்படிப்பட்ட மரங்கள் இராமன் எய்ய எண்ணிய ஏழு மரங்களென்பது கருத்து. (கரு)

* மரத்தினது.

16. ஒக்க நாளேலா முழல்வன வுலேவில வாக
மிக்க தோர்போரு ளுளதேன வேறுகண் டிலமால்
திக்கும் வானமுஞ் செறிந்தவத் தருநிழற் சீதம்
புக்கு நீங்கலிற் றளர்வில விரவிதேர்ப் புரவி

கொண்டுகூட்டு : *இரவி தேர்ப் புரவி, ஒக்க நாள் எல்லாம் உழல்வன. (அவை) உலேவு இல ஆக(க் காரணம் தரு நிழல்; அதனின்) மிக்கது (ஆன) வேறு ஓர் பொருள் உளது என (யாம்) கண்டிலம். திக்கும் வானமும் செறிந்த அத் தரு(வின்) சீத நிழற் புக்கு நீங்கலின் (அவை) தளர்வில.*

பொருள்: *சூரியனது தேர்க்குதிரைகள், ஒரேவிதமாக (ஒரு நாள் போல) எல்லா நாள்களிலும் ஓயாமல் அலேவன. ஆயினும் அவைகள் இளேப்பில்லாதனவாதற்கு(த் தக்க காரணம் அம் மரங் களின் நிழலூடு புகுந்து போகுதலே. அக் குதிரைகளின் இளேப்பை நீக்குதற்கு அந் நிழலினும்) மிக்கதான வேறொரு பொருள் உண்டென்று யாம் கண்டிலேம். எல்லாத் திசைகளி லும் வானத்திலும் நெருங்கி மூடிய அந்த ஏழு மராமரங்களின் குளிர்ந்த நிழலுட் புகுந்து நீங்குதலால் அக் குதிரைகள் தளர்ச்சி யில்லா திருக்கின்றன.*

*'தினந்தோறும் (நாள் முழுதும்) ஒரேவிதமாக (ஓயாமல்) ஓடிச் செல்பவையாகிய சூரியனது தேரிற் பூட்டப்பட்ட ஏழு குதிரைகள் சிறி தும் வருத்தமில்லாதனவா யிருத்தற்கு மேம்பட்டதொரு காரணம் உண் டென்று வேறே கண்டோமில்லே. எல்லாத் திக்குகளிலும் ஆகாயத்திலும் நெருங்கிப் பரந்த அம் மரங்களின் குளிர்ந்த நிழலே அடைந்து செல்வத ஞல் (அக் குதிரைகள்) தளர்ச்சியில்லாதனவாம்.'*—வை. மு. கோ.

*ஒக்க - சமமாக - ஒரேவிதமாக. உழலல் - அலேதல்.*—த. அ. *உலேவு - இளேப்பு.*—த. அ. *மிக்கது - மேன்மையுடையது. செறிந்த - நெருங்கிய. சீதம் - குளிர்ச்சி. புக்கு - புகுந்து. இரவி - சூரியன். புரவி - குதிரை.*

*முந்திய கவியிற் சூரியனேயும் இலேயையும் (மரங்கள்) ஏழையும் சொல்லியவர், அவற்றின் தொடர்பாகச் சூரியனது பச்சையிலேநிறமுடைய ஏழுகுதிரைகளே நினேந்து, அவைகள் ஒரு கணமும் ஓயாமல் ஒவ்வொரு நாளும் உலகைச் சுற்றி உழன்றும் களேப்புறுமையைக் கருதி, அதற்குக் காரணம் காணமுயன்று கண்டுபிடித்தார் போன்று, அந்தக் காரணத்தைக் கூறுவாராய், அது, ஏழு குதிரைகளும் ஏழு மராமரங்களின் குளிர்ந்த நிழல் வழியாக நிதமும் செல்லுதலால் அக் குதிரைகளுக்கு அன்றன் றுண்டாம்*

அயர்ச்சி அன்றன்று அகன்றுவிடுதலே யென்று, அம் மரங்களின் பெருமை யைப் பாவித் துணரப்பண்ணினார். (சகா)

[ அம் மரங்கள், தமது மேற்பாகத்தைக் காணப்பெற்றோர், இவை மலர்கள் இவை நட்சத்திரங்க ளென்று பகுத்தறியப்படாத படி உயரத்தே பூத்த ஒளிமிக்க பூக்கள் பொலிவனவாய், நட்சத்திர மண்டலத்தை அளாவி வளர்ந்த மகோன்னத வளர்ச்சியுடையவை கள்.

அம் மரங்களின் தளிர் இலை அரும்பு காய்கள் காற்று மோதி உதிர்வனவும், கனிகள் கனிந்து முதிர்ந்தும் காற்று மோதி யும் உதிர்வனவும் ஆகியவைகள், பூமியில் விழாமல் ஆகாய கங்கை யில் விழுந்து, அந் நதியோடு பெரும் புறக்கடலிற் போய்ச் சேர்வனவாம்.

அம் மரங்கள், ஒவ்வொன்றும், வேர் பாதாளத்தின் அடிக் குக் கீழேயும், உச்சி விண்முகட்டுக்கு மேலேயும் செல்லப்பெற்று, மகாமேரு வென்னும்படியும், முன் ஒருகால், இருகாலால் மூன்று லோகங்களையும் அளந்து கடந்த திரிவிக்கிரமனை மகாவிட்டுணு வென்னும்படியும் உள்ளவை. ]

**17.** வள்ள லிந்திரன் மைந்தற்குந் தம்பிக்கும் வயிர்த்த
உள்ள மேயென வொன்றினொன் றுள்வயிர்ப் புடைய
தெள்ளு நீரிடைக் கிடந்தபார் சுமக்கின்ற சேடன்
வெள்ளி வெண்படங் குடைந்துகீழ்ப் போகிய வேர

கொண்டுகூட்டு: வள்ளல் இந்திரன் மைந்தற்கும் தம்பிக்கும் (பகை யால்) வயிர்த்த உள்ளம் என, (அவை) ஒன்றின் ஒன்று (குறையாத) உள் வயிர்ப்பு உடைய. (அவை) தெள்ளும் நீர்இடைக் கிடந்த பாரைச் சுமக்கின்ற சேடன் (உடைய) வெள்ளி வெண்படத்தைக் குடைந்து(கொண்டு) கீழ்ப் போகிய வேர.

பொருள்: வாலிக்கும் சுக்கிரீவனுக்கும் (ஒருவருக்கொரு வர் பகை மிகுதியால் இளக்கம் ஒழிந்து கடினப்பட்டு) வயிரமான மனங்கள் வயிரத் தன்மையில் ஒன்றுக்கொன்று தாழாமை போல, அம் மரங்கள் ஒன்றுக்கொன்று குறையாத உள் வயிரம் உடையன. அவைகள் பூமியைத் தாங்குகின்ற ஆதிசேடனுடைய படத்தைத் துளைத்துக்கொண்டு கீழே போகிய வேரினை யுடையன.

வள்ளல் - கொடையாளன். இந்திரன் மைந்தன் - வாலி. வயிர்த்தல் - வயிரித்தல் - வயிரமடைதல் - கடினப்படல். தெள்ளுதல் - தெளிதல். நீர் - கடல். இடை - மத்தி. நீரிடைக் கிடந்த பார் - கடல் சூழ்ந்த பூமி. வெள்ளி வெண் படம் - வெள்ளிபோலும் வெண்மையான படம். வேர - வேரை யுடையன.

பாட பேதம்: *வயிரத் துள்ளமே : உள்வயிரத்த.* (கஎ)

## இராமன் நாண் எறியச் சுக்கிரீவாதியர் அஞ்சி ஓடுதல்

[ அப்படிப்பட்ட மரங்களை இராமன் பார்வையிட்டு எய்ய எண்ணி, வில்லின் நாணை விரலால் எறிந்து எழுப்பிய இடங்காரத் தொனி, இவ்வுலகன்றி ஏனைய எல்லா உலகங்களும் அதிர ஆரவாரித்த தென்றால், பக்கத்தில் நின்றவர் பட்டபாட்டை எப்படிப் பகர்வது! ]

**18.** அரிந்த மன்சிலை நாணெடி தார்த்தலு மமரர்
இரிந்து நீங்கினர் கற்பத்தி னிறுதியென் றயிர்த்தார்
பரிந்த தம்பியே பாங்குநின் றான்மற்றைப் பல்லோர்
புரிந்த தன்மையை யுரைசெயிற் பழியவர்ப் புணரும்

கொண்டுகூட்டு: *அரிந்தமன் (இராமனது) சிலையின் நாண் நெடிது ஆர்த்தலும் அமரர், இரிந்து நீங்கினர்; கற்பத்தின் இறுதி யென்று அயிர்த்தார். பரிந்த தம்பியே (இராமன்) பாங்கு நின்றான்; மற்றைப் பல்லோர் புரிந்த தன்மையை உரைசெயின் அவரைப் பழி புணரும்.*

பொருள்: *இராமனது வில்லின் நாண் மிகுதியாக ஒலித்த மாத்திரத்தில், விண்ணவர்கள் வெருவி ஓடிப்போய்க், கற்பாந்த காலம் வந்து விட்டதுபோலும் என்று சந்தேகங் கொண்டார்கள். இலக்குமணன் ஒருவனே இராமன் பக்கம் விட்டுப் பெயராமல் நின்றான். மற்றைய சுக்கிரீவன் முதலிய பலரும் செய்த செயலின் தன்மையைச் சொன்னால், அவர்களைப் பழி அடையும்.*

*அரிந்தமன் - விட்டுணு - இராமன். ஆர்த்தல் - ஒலித்தல். அமரர் - தேவர். இரிதல் - அஞ்சுதல் - ஓடுதல். இறுதி - முடிவு. அயிர்த்தல் - சந்தேகித்தல். பரிதல் - அன்புறல். பாங்கு - பக்கம். பல்லோர் - பலர். அவர்ப் புணரும் - அவரைச் சேரும்.*

'அமரர் இரிந்து நீங்கினர்' என இங்கு வருவா னேனெனில், இராவணனதி இராக்கதரால் இமிசிக்கப்பட்ட இமையோர், இராவண னுள்பட இராக்கத ரெல்லாரையும் சங்கரிப்பதாகச் சங்கற்பஞ் செய்திருக்கிற இராமன் செயல்களை இடைவிடாமல் அந்தரத்தினின்று எப்போதும் கவனித்துப் பார்த்துக்கொண்டிருப்போ ராதலால், அவர்கள், அபூர்வமும் அருமையும் ஆச்சரியமுமான செயலாகிய மராமர மெய்தலை அவாவோடு எதிர்பார்த்து நின்றனர்; அப்படி நின்றவர், இராமன் வில்லின் நாணொலி கேட்டுப் பயந்து, அம்பெய்தல் காணும் அவாவை அறியாமலே அகலவிட்டு ஓடினு ரென்ப தாம்.

சுக்கிரீவன் முதலியோர், இராமன் வின்னுணொலி கேட்டபோது, செய்த செயல் பயந்தோடியதே. அவர்கள் வீரராயுள்ளார் செய்யத் தகாத அந்தப் பேடிச் செய்கையைச் செய்ததைச் செப்பினுல், அவரைப் பழி சேருமென்று, அவர்கள் பயந்தோடினூர்க ளென்பதை வெளிப்படையாகச் சொல்லாமல் குறிப்பாகவும் சமற்காரமாகவும் சொன்னூர். (கஅ)

### இராமன் அம்பெய்தல்

[ அப்படி ஓடின வானர வீரரில், பயம் ஒருபக்கம் இருக்க, 'எய்தலைக் காண்போமாக, அம் முயற்சியில் உயிர் போக நேரினும் நேருக' என்று துணிந்து திரும்பிய அனுமானாதியோரை, 'என்ன துணிவப்பா இவர்களுக்கு! இவர்களன்றோ தீரர்!' என்று ஏனைய வானர வீரரேறுகள் மெச்சிப் புகழ்ந்து வியந்துகொண்டிருக்கும் போது, இராமன், ஓர் அம்பை யெடுத்து, நாணில் தொடுத்து, முதுகுற இழுத்து, முடுக்கி விடுத்தான். ]

இராம பாணத்துக்கு ஏழெண்ணுடைய எவையும் இலக்கோ எனல்

19. ஏழு மாமர முருவிக்கீ ழுலகமேன் றிசைக்கும்
ஏழு மூடுபுக் குருவிப்பின் னுடனடுத் தியன்ற
ஏழி லாமையான் மீண்டதவ் விராகவன் பகழி
ஏழு கண்டபி னுருவுமா லொழிவதன் றின்னும்

கொண்டுகூட்டு: அவ் இராகவன் பகழி, ஏழு மா மரம் உருவிக், கீழ் உலகம் என்று இசைக்கும் (உலகம்) ஏழும் ஊடு புக்கு உருவிப், பின், உடன் அடுத்து இயன்ற ஏழ் இலாமையால் மீண்டது. இன்னும் ஏழு கண்ட பின் உருவும், ஒழிவது அன்று.

பொருள் : (அப்படி விடுத்த) அந்த ராமபாணம், அதற்கு இலக்காகக் குறித்த அந்த ஏழு பெரிய மரங்களையும் துளைத்துச் சென்று, அது சென்ற திசையில் இருந்த கீழுலகமென்று சொல்லப் பட்ட உலகங்கள் ஏழையும் ஊடு நுழைந்து உருவிச் சென்று, அப்பால் அவ்வுலகங்களை அடுத்துப் பொருந்திய ஏழு என்ற இலக்கமுடைய பொருள் இல்லாமையினால், (தனது இருப்பிட மான இராமன் அம்பறாத்தூணிக்குத்) திரும்பிவந்து சேர்ந்தது: (அது திரும்பிவிட்டதனால் இம்மட்டோ டொழிந்த தென் றெண்ணவேண்டா.) இன்னமும் எப்போதாயினும் ஏழு ஆக வுள்ள பொருள்களைக் காணுமானால் அவைகளையும் துளைக்கவே செய்யும்; (துளையாது சும்மாவிருந்து) ஒழிவதன்று.

மா - பெருமை. மா மரம் - பெரிய மரம். இசைத்தல் - சொல்லல். ஊடு - உள்; நடு. புக்கு - புகுந்து - நுழைந்து. இயலல் - பொருந்தல். மீளல் - திரும்புதல். பகழி - அம்பு. இன்னும் - இன்னமும் - மறுபடியும். 'கீழுலகமேழ் - அதலம், விதலம், சுதலம், தராதலம், ரஸாதலம், மகாதலம், பாதாளம் என்பன. மூன்று மடியிலும் நான்கா மடியிலும் ஏழு என்பது ஆகு பெயர். கண்டபின், பின்னீற்று எதிர்கால வினையெச்சம். ஆல் - அசை'.

(கக)

**20.** ஏழு வேலையு முலகமே லுயர்ந்தன வேழும்
ஏழு குன்றமு மிருடிக ளேழுவரும் புரவி
ஏழு மங்கைய ரேழுவரு நடுங்கின ரென்னே
ஏழு பெற்றதோ விக்கணைக் கிலக்கமென் றெண்ணி

கொண்டுகூட்டு : ஏழு வேலையும், உயர்ந்தனவான மேல் ஏழ் உலக மும், ஏழு குன்றமும், எழுவர் இருடிகளும், புரவி ஏழும், எழுவர் மங்கைய ரும், 'என்னே! இக் கணைக்கு ஏழு இலக்கம் பெற்றதோ?' என்று எண்ணி நடுங்கினர்.

பொருள் : சத்தசமுத்திர மென்ற ஏழு கடல்களும், (சதுர்த் தச புவன மென்ற பதினான்கு உலகங்களுள் துளைக்கப்பட்ட கீழேழ் உலகங்கள் போக எஞ்சிய) மேலே ழுலகங்களும், சத்த குலாசலங்க ளென்ற ஏழு மலைகளும், சத்தருஷிக ளென்ற ஏழு இருடிகளும், சூரியன் தேரிற் பூட்டிய சத்தசந்தசுக ளென்னும் ஏழு குதிரைகளும், சத்தமாத ரென்ற ஏழு மாதரும், 'என்னே! இந்த

அம்புக்கு ஏழு என்னும் தொகையுடைய பொருளின மெதுவும் இலக்காகப் பெற்றதோ?' என்று எண்ணிப் பயந்து நடுங்கினர்.

வேலை - சமுத்திரம். புரவி - குதிரை. 'உயர்ந்தன (ஆன) மேல் ஏழு உலகமும்' எனக் கூட்டுக. 'பெற்றதோ' என்ற ஒருமைப் பயனிலைக்குச் சொல்லாற் பொருந்தாத 'ஏழு' என்ற எழுவாயைப் பொருளாற் பொருந் தும்படி, அந்த 'ஏழு' என்பதற்கு 'ஏழென்னும் தொகையுடைய பொரு ளினம்' எனப் பொருள் கூறியிருத்தல் காண்க. 'ஏழென்னுந் தொகையுடைய தெல்லாம் குறியாகப் பெற்றதோ?' என்பது முந்திய உரை. அஃறிணை யெழுவாய்கள் மிகுந்தும் உயர்திணை யெழுவாய்கள் குறைந்து மிருந்தும் எல்லா எழுவாய்களும் 'நடுங்கினர்' என்ற உயர்திணைப் பயனிலை கொண் டது, உயர்திணையின் சிறப்புப்பற்றி என்க. 'என்னே', ஓர் அதிசய இரக் கக் குறிப்புச்சொல்.

'ஏழென்னும் எண்ணினையுடைய பல பொருள்களை ஒருங்கே யமைத் தது, கவிசமத்காரம். ஏழு வேலை - உவர்நீர், கருப்பஞ்சாறு, மது, நெய், தயிர், பால், நன்னீர் இவற்றின் மயமானவை. மேலே முலகம் - பூலோகம், புவர்லோகம், சுவர்லோகம், ஜநலோகம், மஹர்லோகம், தபோலோகம், சத்தியலோகம் என இவை. ஏழு குன்றம் - கைலை, இமயம், மந்தரம், விந்தம், நிடதம், ஏமகூடம், நீலகிரி என்பன: இவை ஸப்தகுலாசல மெனப் படும். இருடிகள் எழுவர் - அத்திரி, பிருகு, குத்ஸர், வஸிஷ்டர், கௌதமர், காசியபர், ஆங்கீரஸர்: இவர்க்குப் பிறவாறு முரைப்பர். காயத்ரீ, உஷ் ணிக், அனுஷ்டுப், ப்ருஹதீ, பங்தி, த்ரிஷ்டுப், ஜகதீ என்ற ஏழு சந்தசுகளும் சூரியனது தேரின் குதிரைகளென நூல்கள் கூறும். மங்கைய ரெழுவர் - பிராஹ்மி, மாஹேச்வரி, கௌமாரி, நாராயணி, வாராகி, இந்திராணி, சாமுண்டி.'—வை. மு. கோ.

பாட பேதம்: நடுங்கின: என்ப. (உ௦)

இராமனைச் சுக்கிரீவன் துதிக்க, மற்ற வானரர் வாழ்த்தல்

[ இவ்வாறாக, ஏழென்னும் எண்ணுடைய எல்லாரும் யாவை யும், எண்ணி முதலிற் கலங்கினாரென்றாலும், பின்பு, அந்த அம்பு தருமமூர்த்தியான தாசரதியினுடைய படையாதலால் தீங்கு செய்யாதென்று தெளிந்தார்கள். அப்போது, சுக்கிரீவன், இராக வன் பாதங்களில் விழுந்து பணிந்து, 'நீ தேவாதிதேவனே! உன்னை எனக்குத் துணையாக இங்கே வரச்செய்தது எனது நல் லூழ். இனி எனக்கு ஆகாத காரியம் யாதும் இல்லை. தாயே

போலும் தயாபரனே உனக்கு அடியேன் அடியார்க் கடியேன்' என்று தாழ்மையோடு சொன்னான். மாருதி முதலிய மற்றைய வானரர் மகிழ்ச்சிக் கள்ளுண்டு மயக்கந் தலைக்கேறி 'வாலிகாலன் வாழி!' என்று ஆடிப் பாடிக் களித்தார்கள். ]

துந்துபி வரலாற்றைச் சுக்கிரீவன் சொல்லத் தொடங்குதல்

[ இராமன், அந்த மலைமேல் வேறொரு மலை கிடந்தாற் போலக் கிடந்த எருமை முகமுடைய துந்துபி யென்னும் அசுரனது கங்காளத்தைக்* கண்டு, 'இது, இயமனூரும் எருமைக்கடா இறந்ததன் எலும்பா?' என்று வினவச், சுக்கிரீவன் சொல்லுவானான். ]

## 5. துந்துபிப் படலம்

[ துந்துபி என்னும் அசுரன் எலும்பை இலக்குமணன் கால் விரலால் நெடுந் தொலை போய்விழ எறிந்ததைக் கூறுவது ] †

மதங்கமுனி வாலியைச் சபித்தல்

[ 'காரெருமை என்னும் முகமும், பேரிகை என்னும் குரலும், துந்துபி என்னும் பெயருமுடைய ஓர் அசுரன், விட்டுணுவிடஞ் சென்று போருக் கழைக்க, விட்டுணு சிவனிடம் செல்லச் சொல்ல, சிவன் இந்திரனிடமும், இந்திரன் வாலியிடமும் போகச்சொல்லிப் போக்குக் காட்டி ஒருவர்பின் னொருவராகக் கடத்திவிடக் கடைசியாக வாலியை அடைந்து, "போர்புரிய வா!" என்றான். வலிந்து சண்டைக்கு வந்தவனும் வந்த சண்டையை விடாதவனும் நெடுங் காலம் கடும்போர் புரிந்தனர். முடிவில், வாலி, துந்துபியை மண்ணில் மோத்துண்டு மண்டையுடைந்து காலொடிந்து இரத்தங் கக்கக் காலால் எற்றிக் கையாற் குத்தித் தூக்கியெடுத்துத் தூரம் போய்விழ எறிந்தான். அதனால், துந்துபியின் உடம்பு இந்த மலையில் விழுந்திட, உயிர் அந்த உலகை அடைந்தது. ஆவி

* கங்காளம் - உடல் முழு எலும்பு.

† 'இவ் வசுரனது முழக்கம் துந்துபி யென்னும் வாத்தியத்தினது பேரொலியை ஒத்தலால், இவனுக்கு இப் பெயர். துந்துபி - பேரிகை.'

நீங்கிய ஆகமும் அதனினின்று சிந்திய இரத்தமும் மதங்க முனியின் ஆச்சிரமத்தை வாலாமை* செய்ததைக் கண்டு, அம் முனிவன், கோபங்கொண்டு, இது வாலி செயலென்று ஞானதிட்டியாலறிந்து, "அவன் இங்கு வருவானாயின், தலை வெடித்துச் சாகக் கடவன்; அவனைச் சேர்ந்தார் போந்தாற் கல்லாகக் கடவர்" எனச் சபித்தான்' என்று சுக்கிரீவன் சொன்னான். ]

### இலக்குமணன் துந்துபி எலும்பை எறிதல்

[ இராமன், 'இந்த ஆச்சிரமத்தை அசுத்தப்படுத்திய இதனை அப்புறப்படுத்து' என, இலக்குமணன் எளிதாக அதனைக் கால் விரலால் எற்ற, அது வெகுதூரம் போய்விழுந்தது. அந்த அரிய செயலைக் கண்ட வானரர் ஆச்சரியமடைந்து உற்சாகமுற்று ஆரவாரித்தனர். அப்போது, சுக்கிரீவன் இராமனை நோக்கி, 'நான் தெரிவிக்கவேண்டிய தொன்றுண்டு' என்று தெரிவிப்பானாயினான். ]

## 6. கலன்காண் படலம்

[ சீதையின் ஆபரணங்களைச் சுக்கிரீவன் காட்ட இராமன் கண்டதைக் கூறுவது ]†

### சுக்கிரீவன் சீதை நகைகளை இராமனுக்குக் காட்டல்

[ 'முன் ஒரு நாள், இந்த இடத்திலே, யாங்கள் இருந்தபோது, வானத்திலே மிகவும் உயர்ந்த தானத்திலே ஒரு மாது கதறியது காதில் விழுந்தது. அவள், இராவணன் எடுத்துக் கொண்டு போன சீதை போலும்! அவள், தன் ஆபரணங்களை ஒரு சேலையுள்வைத்து முடிந்து யாங்கள் இருந்த இடத்தில் எறிந்தாள். அவைகள் சேதமுறாமற் கையேந்தி ஏற்றுச் சேமமாக வைத்திருக்கின்றோம்' என்று சுக்கிரீவன் சொல்லி, அந்த முடிப்பை எடுத்துக்கொண்டு வந்து இராமனுக்குக் காட்டினான். ]

---

* வாலாமை - அசுத்தம். † கலன் - ஆபரணம்.

## சீதையின் ஆபரணங்களால் இராமன்பால் உண்டான மெய்ப்பாடுகள் *

**21.** தெரிவுற நோக்கினன் றெரிவை மெய்யணி
எரிகன லெய்திய மெழுகின் யாக்கைபோல்
உருகின னென்கில முயிருக் கூற்றமாய்ப்
பருகின னென்கிலம் பகர்வ தென்கொலாம்

**கொண்டுகூட்டு:** *தெரிவையின் மெய்யணியைத் தெரிவு உற (இராமன்) நோக்கினன். எரிகனல் எய்திய மெழுகு யாக்கை போல் உருகினன் என்கிலம்; உயிருக்கு ஊற்றம் (அளிப்பது) ஆய்(க் கருதி அவற்றைப்) பருகினன் என்கிலம்; (அவன் நிலைமையை) என் பகர்வது?*

**பொருள்:** *அந்த முடிப்பிலிருந்த ஆபரணங்களைச் சீதையினுடையவைதாமா வென்று தெரிந்துகொள்ளும்படி இராமன் பார்த்தான். பார்க்கவே, சுவாலித்து எரிகின்ற தீயை அடைந்த மெழுகுருவம்போல மேனி நெகிழ்ந்து உருகினனென்று சொல்லவும் வல்லேமல்லேம்; (அமுதம்போல) உயிருக்குப் பலம் அளிப்பது ஆகக் கருதி அந்த ஆபரணங்களை விழுங்கினன் (போல ஆசையோடு பார்த்தான்) என்று சொல்லவும் வல்லேமல்லேம்: (அவன் அடைந்த நிலைமையை) யாதென்று சொல்வது? (இன்னதென்று சொல்ல இயலவில்லை யென்றபடி.)*

*தெரிவை - பெண். மெய் - தேகம். அணி - ஆபரணம். மெழுகின் என்பதில் இன் சாரியை. யாக்கை - உடம்பு. என்கிலம் என்பதில் கில் ஆற்ற லுணர்த்தும் இடைநிலைச் சொல். ஊற்றம் - வலி - பலம். ஆய், ஆக என்னும் எச்சத்திரிபு. பருகுதல் - விழுங்குதல். என் - யாது. கொல், ஆம் இரண்டும் அசை. 'உருகுதல்' தேகம் குழைந்து மெலிதலையும், 'ஊற்றமாய்ப் பருகுதல்' உடம்பு பலப்பட்டுப் பூரித்தலையும் குறிப்பித்தன.*

*உருகியது பிரிவாற்றாமையாலும், பருகியது ஆபரணத்தை அடைந்தமைபோல ஆபரணத்தை அணிந்தவளை அடையலாமென்னும் ஆசையாலும் என்க. ஆபரண தரிசனம்† மாகிய ஒரே காரணத்தால், உருகுதலும் பருகுதலுமாகிய ஒன்றுக்கொன்றெதிரிடையான காரியங்கள் நிகழ்ந்தன என இக் கவியிலும், அந்த ஆபரண பரிசனத்தால்‡, நீங்கின உணர்வு மீண்டது, நீங்காதிருந்த உயிர் வதைக்கப்பட்டாற் போல வருந்தியது என்ற இரண்டு எதிரிடைச் செயல்களும், தேகம் சந்தனத்தாற் குளிர்ந்தாற் போலக் குளிர்ந்தது,*

* மெய்ப்பாடுகள் - அகத்து நிகழ்ச்சிகளைப் புறத்தார்க்குப் புலப்படுத்தும் உடற்குறிகள். † தரிசனம் - காணுகை. ‡ பரிசனம் - தொடுகை.

தீயினால் வெதும்பினாற்போல வெதும்பியது என்ற வேறிரண்டு மாறுபட்ட நிகழ்ச்சிகளும் நிகழ்ந்தன எனப் பின்வரும் 'விட்டபே ருணர்வினை' என்ற கவியிலும் அநுதாபமும் ஆச்சரியமும் உண்டாகக் கூறினார். இவ்வாறே, சீதை ஆபரணங்களைக் கண்ட இராமன் மெய்ப்பாடுகள் போல, இராமன் கணையாழியைக் கண்ட சீதையின் மெய்ப்பாடுகள் நிகழ்ந்ததை, 'வீங்கினள் மெலிந்தனள் குளிர்ந்தனள் வெதுப்போ - டேங்கினள்'* என்றும்,

> 'ஒருகணத் திரண்டு கண்டேன் ஒளிர்மணி ஆழி ஆன்ற
> திருமுலைத் தடத்து வைத்தாள் வைத்தலும் செல்வ நின்பால்
> விரகமென் பதனின் வந்த வெங்கொழுந் தீயினால் வெந்
> துருகிய துடனே ஆறி வலித்தது குளிர்ப்புள் ளூற' †

என்றும் கூறியிருத்தல் காண்க.

'மெழுகின் யாக்கை போய் உருகினன்' என்ற பாடத்துக்கு, மெழுகு போல மேனி உருகிப்போனா னென்று பொருள் கொள்க.

பாட பேதம்: யாக்கைபோய். (உக)

**22.** நல்குவ தென்னினி நங்கை கொங்கையைப்
புல்கிய பூணுமக் கொங்கை போன்றன
அல்குலி னணிகளு மல்கு லாயின
பல்கலன் பிறவுமப் படிவ மானவே

**கொண்டுகூட்டு:** நங்கை கொங்கையைப் புல்கிய பூண் அக் கொங்கை போன்றன; அல்குலின் அணிகளும் அல்குல் ஆயின; பிற பல் கலனும் அப்படிவம் ஆன; இனி (அவை) நல்குவது (ஆன மகிழ்ச்சி) என்?

**பொருள்:** சீதையினால் அணியப்பட்டு அவள் தனங்களைப் பொருந்தியிருந்த ஆபரணங்கள் அந்தத் தனங்கள் போன்றன; அவ்வாறே மற்றைய பல ஆபரணங்களும் அவை அவை அணியப் பட்டிருந்த அந்த அந்த அங்கங்கள் போன்றன: (இவ்வாறு இராமனுக்கு மகிழ்ச்சி அளித்த ஆபரணங்கள்) இதன்மேல் அளிப்பது ஆன மகிழ்ச்சி யாது உளது?

நல்கு - உதவு. என் - யாது. இனி - இதன்மேல் - இதற்கதிகமாக. புல்கு - புல்லு - பொருந்து. பூண் - ஆபரணம். அல்குல் - அரை—நு. அ. படிவம் - உடலுறுப்பு.—நு. அ. ஆன - போன்றன. 'ஆதல்' போலல் எனப் பொருள்படல் 'ஆள்வா ரிலிமாடாவேனே' என்பதிற் காண்க.

---

* உருக்காட்டு படலம் சுசு. † திருவடி தொழுத படலம் எஎ.

உம்மை பிரித்துப் 'பிற பல்கலனும்' என இயைக்க. 'படிக ளாயவே' என்ற பாடத்தில் கள் அசை.

சீதையின் ஆபரணங்கள் அவைகளை அணிந்திருந்த அவள் அங்கங்கள் போல இராமனால் பாவிக்கப்பட்டு, அவன் அவைகளைத் தரிசித்தபோதும், பரிசித்தபோதும், அவனுக்கு இன்பம் ஈந்தன வென்பதாம்.

பாட பேதம்: படிக ளாயவே. (உஉ)

23. விட்டபே ருணர்வினை விளித்த வென்கெனோ
அட்டன வுயிரையவ் வணிக ளென்கெனோ
கொட்டின சாந்தெனக் குளிர்த்த வென்கெனோ
சுட்டன வென்கெனோ யாது சொல்லுகேன்

கொண்டுகூட்டு: அவ் அணிகள் (இராமன் திறத்தில்) விட்டபேர் உணர்வினை விளித்த என்கெனோ! உயிரை அட்டன என்கெனோ! கொட்டின சாந்து என, (அவன் மேனியைக்) குளிர்த்த என்கெனோ! (அல்லது, தீப்போலச்) சுட்டன என்கெனோ! யாது சொல்லுகேன்!

பொருள்: இராமன் திறத்தில் அந்த ஆபரணங்கள் நீங்கின உணர்வை மீண்டுவர அழைத்தன வென்று சொல்வேனோ! உயிரைக் கொன்றன (போல வருந்தச் செய்தன) என்று சொல்வேனோ! பூசின சந்தனம் போல அவன் மேனியைக் குளிரச் செய்தன வென்று சொல்வேனோ! தீயைப் போலத் தபிக்கச் செய்தன வென்று சொல்வேனோ! என்ன வென்று சொல்வேன்!

விடுதல் - நீங்குதல். விளித்தல் - அழைத்தல். என்கென் - என்று சொல்வேன். அடுதல் - கொல்லுதல். அட்டன - கொன்றன. அணி - ஆபரணம். கொட்டுதல் - பூசுதல்; அப்புதல்—த. அ. 'குளிர்த்த', குளிர்ந்த என்பதன் பிறவினை: குளிரச்செய்தன என்பது பொருள்.

'பிரிந்திருக்கின்ற சமயத்தில் அப் பிரிந்த பொருளை நினைப்பூட்டுகின்ற பொருள்கள் யாவும் ஒருபால் மகிழ்ச்சியையும் ஒருபால் வருத்தத்தையும் விளைத்தல் இயல்பாதலால், இங்ஙனம் மாறி மாறிக் கூறினர்............ இராமபிரானுக்கு இயல்பாக வுள்ள பேரறிவு பிராட்டியைப் பிரிந்ததனாலாகிய வருத்தத்தால் நீங்கியிருந்தது அவளது அணிகலங்களைக் கண்டதனால் மீண்டுவரலாயிற் றென்பது முதல் வாக்கியத்தின் கருத்தும், அவ் வணிகலங்கள் அவளது அழகிய அவயவங்களை நினைப்பூட்டிப் பிரிவுத் துயரை மிகுவித்து அப் பெருமானுக்கு மரண வேதனையைச் செய்வனவுமாயின வென்பது இரண்டாம் வாக்கியத்தின் கருத்தும், அவை அவனது

*விரகதாபத்தைத் தணிவித்தன வென்பது மூன்றும் வாக்கியத்தின் கருத்தும் அத் தாபத்தை மிகுவிப்பனவு மாயின வென்பது நான்காம் வாக்கியத்தின் கருத்துமாம். இன்னபடி யென்று ஒன்றைத் துணிந்து, கூறமாட்டாமையின், இங்ஙனம் விகற்பித்து, "யாது சொல்லுகேன்" எனலாயிற்று.'* —வை. மு. கோ.

பாட பேதம்: *குளிர்ந்த.* (உ௩)

**24.** மோந்திட நறுமல ரான மொய்ம்பினில்
ஏந்திட வுத்தரி யத்தை யேய்ந்தன
சாந்தமு மாயொளி தழுவப் போர்த்தலால்
பூந்துகி லாயவப் பூவை பூண்களே

**கொண்டுகூட்டு:** *அப் பூவை பூண்கள் (இராமனுக்கு) மோந்திட நறுமலர் ஆன; மொய்ம்பினில் ஏந்திட உத்தரியத்தை ஏய்ந்தன; (அவற்றின்) ஒளி தழுவச் சாந்தமாய் (ஒளி) போர்த்தலால் பூந்துகிலும் ஆய.*

**பொருள்:** *இராமனுக்குச் சீதையின் ஆபரணங்கள், மோந்து பார்த்தற்கு நறுமணமுடைய மலர்கள் போன்றன; தோள்களில் ஏந்த உத்தரீயம்போ லாயின; (அவ் வாபரணங்களை மோந்த போதும் ஏந்திய போதும் அவற்றின்) ஒளி (அவன் உடம்பைப் பொதிந்தாற்போலப்) பொருந்தலாற் சந்தனம் போன்று, (அவ் வொளி உடலை) மூடுதலால் அழகிய (போர்வை) வஸ்திரமும் போன்றன.*

*நறுமை - நன்மணம்.—ஐங்குறு. ஆன - போன்றன. மொய்ம்பு - தோள். உத்தரீயம், அங்கவஸ்திரம், மேலாடை என்பவை ஒரு பொருள் குறித்தவை. ஏய்ந்தன - போன்றன. சாந்தம் - சந்தனம். ஆய் - போன்று. தழுவல் - பொருந்தல். பூந்துகில் - அழகிய வஸ்திரம்; பூப்போல மென்மையான ஆடையுமாம். ஆய - போன்றன. பூவை - பெண். பூண் - ஆபரணம். உம்மை பிரித்து 'ஒளிதழுவச் சாந்தமாய் (ஒளி) போர்த்தலாற் பூந்துகிலும் ஆய' என இயைக்க. சாந்தமும் என்பதில் உள்ள உம்மையை இசைநிறையாகவுங் கொள்ளலாம். செய்யுளாதலால், பூந்துகிலுக்குப் பின் உம்மை தொக்கதாகக் கொண்டு, ஒளி (உடம்பைத்) தழுவப் போர்த்தலால், 'சாந்தமும் ஆய்ப் பூந்துகிலும் ஆய' எனவும் கொள்ளலாம்.*

பாட பேதம்: *பூந்துகி லாயின.* (உச)

சோகித்த இராமனைச் சுக்கிரீவன் தெளிவித்தல்

[ இவ்வாறாக, இராமபிரான், சீதாதேவியின் ஆபரணத்தால், மகிழ்ச்சியும் வருத்தமும் மாறி மாறி அடைந்தபோது, இறுதியாக விரகதாப வேதனை, விடமேறினாற் போல மிகுதியாக, அதனை ஆற்றும் ஆற்றலின்றி, உள்ளமும் உடலும் ஒருங்கு தளர்ந்து, நினைப்பும் மூச்சும் நெடும்பொழுது நீங்கித் தன்வச மிழந்து, தரையிற் சாய்ந்து விழுந் தருணத்தில், அருகிலிருந்த சுக்கிரீவன், அவனைத் தழுவித் தாங்கி, அவனுடைய பரிதாப நிலைமையைப் பார்க்கச் சகியானாய்த் துக்கம் மிகுந்து சொல்லுகின்றான் : 'அந்தோ ! இந்த ஆபரணங்களைக் காட்டி உன் உயிரைப் போக்கினேன்போலும் ! ஐயா ! வருந்தாதே ! தேவி எந்த உலகத்திலிருந்தாலும் தேடிக் கண்டுபிடித்து, அவளைத் திருடிய தீயவனை மாயச்செய்து, அவளை மீட்டுக்கொண்டுவந்து கொடுத்து என் சேவகத்தைக் காட்டுவேன். அவளைக் கவர்ந்த காதகன் கரங்கள் இருபதும் சிரங்கள் ஒருபதும் உன் அம்பு ஒன்றுக்கே பற்றாதே! அப்படிப்பட்ட பெருமையுடைய நீ அந்த அற்பனைத் தண்டித்தற்கு எழுந்தருளல் வேண்டா. இங்கேயே யிருந்தருள். அடியேன் சென்று அவன் சிரங்களைத் திருகி யெறிந்து தேவியைச் சிறையினின்று திருப்பிக்கொண்டுவந்து சேர்ப்பேன். சிறியேன் சிறு தொண்டைச் சிறிது திருக்கண் சார்த்தியருள்.

'நீ இட்ட கட்டளையை இயற்றும் ஏவலரோ, ஆற்றல் மிக்க அனுமானாதியரோம் ; தம்பியோ, பேராற்றல் பெரிதுள்ள பெருந்தகை ; நீயோ, ஆர்துணையும் வேண்டாத அசகாயசூரன். இப்படியெல்லாமிருக்க, எப்படி உன்னைக் குறைவுடையவனாகக் கருதுகின்றாய் ? உன்னா லாகாத காரியம் ஒன்றுமின்று. மும்மூர்த்திகளுள் எம்மூர்த்தியும் உன்னை ஒவ்வார். ஒவ்வொருவராக ஒவ்வுதலில்லாத அவ் விறைவர் மூவரும், ஒன்றுசேர்ந்து ஒருவரானாலன்றி உனக்கு ஒப்பாகார். எனது சிறு குறைதீர்த்தல் பிற்பாடாகுக. இப்போது யாங்கள் தேவியைத் தேடச் செல்வேம். விடை தருக.'

அவ்வாறு சொல்லவே, அதுவரையும் அவன் சொல்லியதைக் கண்மூடியிருந்தபடியே கேட்டதன்றிச் சொல்லக்கடவதில்லாதிருந்ததனாற் சும்மா இருந்த இராமன், 'விடைதருக'

என்றதற்கு மறுமொழி அளிக்கவேண்டிய அவசியத்தால் அறிவு கிளர்த்தப்பெற்றுக், கண்திறந்து அன்புடன் நோக்கிச் சொல்லு கின்றான். ]

சானகியைச் சிறைமீட்காமைக்காகத் தாசரதி
தன்னை நொந்துகொள்ளல்

[ 'தீவினையேன் சீவனோடிருக்கும்போதே அவள் ஆபரணங் களை அகற்றிவிட்டாள். நாயகன் சாகுமுன் நகைகளை நீக்க நாயகி என்காலத்துக்கு முன்காலத்தில் எவளேனும் இருந்த துண்டோ! இதனால் யான் இருந்தும் இறந்தேனே யன்றோ! அவள், "நாயகன் வருவான், நம்மை மீட்பான்" என்றிருக்க, நான் வீணே நாட்போக்கிக்கொண் டிருக்கின்றேன்! அவளைக் காத்தற் குதவாமற் போனதன்றி மீட்டற்கும் உதவாதிருக்கிற வில்லை வெட்கமின்றி வீணே சுமந்துகொண் டிருக்கின்றேன்! தக்கோரா யுள்ளோர், தம்மொடு எவ்வகைத் தொடர்பு மில்லாமல் தற்செய லாகத் தாம் செல்லும்வழியிற் செல்லும் தையலாரை ஆரேனும் துன்புறுத்துவாரானல், அவரைத் தடுத்து அவரோடு அமர் புரிந்து ஆவியும் ஈகுவர். யானோ, என்னையே பரமாக நம்பிய என் இல்லாள் துன்பத்தையும் தீர்க்காதிருக்கின்றேன். எனது முன்னோர் கடலைத் தோண்டினர். கங்கையை வானகத்தினின்று மண்ணகத்துக்கு வரச்செய்தனர். அத்தகைய அருஞ்செயல்கள் புரிந்தவர்கள் பெருங்குலத்திற் பிறந்த யானோ, என் மனைவியின் வருத்தத்தையும் மாற்றமாட்டாத மகா நிர்ப்பாக்கியனா யிருக்கின் றேன். எனது பூர்வீகர் புகழைப் புகழ்வானேன்! என் தந்தை, இந்திரனை வென்று இந்திரலோகத்தைக் கைப்பற்றிய, அந்தகனும் அஞ்சும் சம்பராசுரனைச் சயித்து, இந்திரனுக்கு அவன் இராச்சி யத்தை ஈந்து அரிய புகழ்பூண்டான். அவன் வயிற்றிற் பிறந்த யான் பெரிய பழிபூண்டேன். என் தந்தை சத்தியவாக்குத் தவறாதபடி காக்க முடிகூடாத யான், மனைவியை மாற்றான் கவராத படி காவாத பழிசூடினேன்' என்று நொந்து துன்பம் மேலிடச் சோர்வானான இராமனைச் சுக்கிரீவன் ஆறுதல் வார்த்தைகள் கூறித் தேறுதலடையச் செய்தான்.

தேறுதலடைந்தவன், 'சிநேகிதே! நீ தேற்றியதனால் தேறி னேன். தேற்றாதிருந்தால், செத்திருப்பேன். இனி, எனக்குச்

சாதலை தாரகம். உயிர்விடா தொழியேன். ஆயின், உன் குறை தீர்த்தாலன்றி உயிரை விடேன்.' என்றான். ]

### இராமனாதியர் வாலி வாழ்ந்த மலையை அடைதல்

[ அப்போது, அநுமான் அஞ்சலித்து, 'அடியேன் அறிவித்துக்கொள்ளுவ துள்ளது. அதனைத் திருச்செவி சேர்த்தருள். வாலியை மடித்து, மன்னவன் சுக்கிரீவனைச்செய்து, சேனையைத் திரட்டினாலன்றித் தேவியைத் தேடலரிது. அவளை ஒளித்து வைத்திருக்கும் இராக்கத ரிருப்பிடத்தை யாமறியேம். அவளை ஒவ்வோரிடமாகத் தேடினால், அதற்கு அளவற்ற ஆண்டு வேண்டும். அன்றி, அரக்கர், அவளை அடிக்கடி வெவ்வேறிடங்களிற் கொண்டுபோய் வைப்பார்கள். ஆதலால், எல்லா இடங்களிலும் ஏககாலத்திற் சென்று துருவுதல் இன்றியமையாதது. அது, படையாலன்றி முடியாது. எம்மவர் படை எழுபது வெள்ளமுள்ளது. ஊழிக்காலக் கடல்போல உலக முழுதும் ஒருமிக்கச் சென்று தேடவல்லது' என்றான்.

அதுகேட்டு, இராமன், 'வாலியிடம் போவோம், வாருங்கள்' என, எல்லாரும் புறப்பட்டனர். அவர்கள், சிங்கம் புலிகள் திரண்டு செல்லல்போல, மலைமேல் மலையாகப் பல மலைகளேறிப் பல யோசனை உயரம் போய் வாலியிருந்த மலையை அடைந்தனர். அடைந்தவர்கள், அப்பாற் செய்யவேண்டியது யாதென ஆலோசனை செய்வாராயினர். ]

## 7. வாலி வதைப் படலம்

[ இராமன் வாலியைக் கொன்றதைக் கூறுவது ]

### சுக்கிரீவன் போருக்கழைக்க, வாலி புறப்பட, தாரை* தடுத்தல்

[ இராமன் சுக்கிரீவனை நோக்கி, 'நீ வாலியைப் போருக்கழைத்துவந்து போர்செய்யும்போது மறைந்து நின்று வாளி எய்து அவனைக் கொல்வது தக்கதென்பது யான் தீர்க்கமாக

* தாரை, வாலி மனைவி.

ஆலோசித்துச் செய்த முடிவு' என்றான். தன் தமையனை எவ் வாற்றானும் கொல்லும் நோக்கமுடைய சுக்கிரீவன், அதற் கிசைந்துசென்று, வாலி காதுள் மோதும்படி, 'போர்க்குப் புறப் படு! போர்க்குப் புறப்படு!' என்று ஆர்ப்பரித்து, இடியிடித்தாற் போலத் தோள்புடைத்துத், தொடைதட்டி வீர ஆரவாரம் செய் தான். அந்த ஆரவாரம், குகைக்குள் உறங்கும் சிங்கத்தின் செவி யுள்ளே வெளியிலிருந்து பிளிறுகின்ற யானை முழக்கம் புகுந்தாற் போல, மாளிகைக்குள்ளே வெண்மலர் மெத்தைமீதே, வெள்ளிய பாற்கடலில் வெள்ளியங்கிரிபோற் கிடந்து விழிதுயிலும் வாலி காதுள் நுழைந்தது. நுழையவே, அவன் ஆச்சரியமடைந்து, 'ஒளித்துப் பிழைத்திருந்தவன் வெளிப்பட்டு வந்தது நன்றா யிருக்கின்றது!' என்று, இகழ்ச்சிக்குறிப்பு வெளிப்படச் சிரித்து, 'இதோ! வந்துவிட்டேன்!' என்று உரத்து உரைத்த ஓசை அ[illegible] ங்கும் முட்ட, [illegible] போது, மட[illegible] தாரை தடுக்க, [illegible] அஞ் சாது அறைகூவியவன் ஆவியை அரைக்கணத்தில் உண்டு மீள் வேன்' என, 'உன் தோள்வலிக்கு ஆற்றாது தோற்றோடியவன் புது வலிமை பெறவில்லை, மறு சனனமும் உறவில்லை. அப்படி யிருக்க இப்பொழுது வலிந்து போர்க்கு வந்தது வலிமிகுந்த துணை படைத்தமையால்' என, 'அவனுக்காக மூன்றுலகத் தோரும் ஒன்றுகொண்டு வந்து என்னை எதிர்த்தாலும், அவர்க ளனைவரும் தோற்று ஓடுதல் தேற்றமானது. ஆதலால், ஒரு வரும் அவனுக்குத் துணையாக வாரார். எவரேனும் வருவாரெனில், அவர் பலத்திற் பாதி எனக்குச் சேரும். என் பலத்தோடு அவர் தம் பலத்திற் பாதியும் அடைந்த என்னை அவர்கள் எவ்வாறு வெல்வார்கள்?' என, 'இராமனென்பவன் அவனுக்கு உயிர்த் துணைவனாகி உன்னைக்கொல்ல உடன்வந்துள்ளானென்று, உண்மை யன்புடையாருளவறிந் துரைத்தனர்' என, 'அடி, பாவி! அந்த ஆண்டகை திறத்தில் அடாதது கூறி அபசாரப்பட்டுவிட்டாய்! அவனி மாந்தர்க்கு அறநெறிகள் இவைகளென அவைகளை அனுட் டித்துக் காட்ட அவதரித்திருக்கிற அறக்கடவுளான அவன், இரு வர் பொரும் போரில் இடையே புகுந்து ஓரவாரமாக ஒருவருக்கு உதவிசெய்வானென்று, பெரிய பேதைமைப் பெண்மதியாற் கூறிப் பிழைபாடு பெரிதுடையை ஆனாய். மாற்றாந்தாய் வார்த்தைப்படி

*தம்பிக்குத் தன் அரசப் பெருஞ்செல்வம் அனைத்தையும் அக மகிழ்ந்து அளித்துத் "தம்பிய ரல்லது தனக்கு வேறுயிர்" இல்லாத சகோதர வாஞ்சை வடிவமானவன், யானும் என் தம்பியும் போர்புரியும்போது என்மீது அம்பு விடுவானோ! சிறிது போது பொறுத்திரு. இமைக்குமுன் சென்று, அவனையும் அவனுடன் வந்தாரையும் கொன்று திரும்புவேன்' என்றான். அவள் அச்சத்தால் மறுத்துரை வழங்க மாட்டாதவளானாள். ]*

## வாலி வடிவை இராமன் வியத்தல்

*[ மலையினின்று புறப்பட்டுச் சுக்கிரீவனெதிரே தோன்றிய வாலி, தூணினின்று வெளிப்பட்டு இரணியனெதிரே தோன்றிய நரசிங்கம் போல நின்றான். அப்போது, இராமன், அவன் தோற்றங் கண்டு ஆச்சரியங்கொண்டு, இலக்குமணனை நோக்கித், 'தம்பி, இவனை நன்றாகப் பார். மானவர், வானவர், தானவர், ஏனவர் * யாவரும் இவனுக்கு இணையாகா ரென்பது கிடக்க: எந்தக் கடல்தான், எந்த மலைதான், எந்தக் காலாக்கினிதான், இவனை நேரும்? சொல்!' என்றான். ]*

## வாலி சுக்கிரீவரைப்பற்றிய இராம லக்ஷ்மண சம்வாதம்

*[ இலக்குமணன், 'சுக்கிரீவன், தமையனைக் கொல்லும் இயமனைக் கொண்டுவந்திருக்கின்றான்: சாதாரணமாகக் குரங்குகள் செய்யும் சண்டையைச் செய்ய வந்தவனல்லனென்பது என் மனத்தை வருத்துதலால், வாலி மேனி மாண்பை மதித்துணர மாட்டாதிருக்கின்றேன். இன்னும், என் மனம் பொறுக்கமாட்டாது புழுங்குகின்ற ஒன்றைப் புகல்வேன். தருமமுறை தவறித் தம் காரியத்தைச் சாதிக்க முயல்வாரை நம்புதல் நல்லதன்று. தனது தமையனைப் பகைவனாகக் கருதிச் சூழ்ச்சி செய்து மாய்க்கத் துணிந்தவன், மற்றவர் திறத்தில் பற்றுக்கோடாவனோ?' என்றான். ]*

25. அத்தா விது கேளென வாரியன் கூறு வானிப்
பித்தாய வி லங்கி னொழுக்கினைப் பேச லாமோ
எத்தாயர் வயிற்றினும் பின்பிறந் தார்க ளெல்லாம்
ஒத்தாற் பரதன்பெரி துத்தம னாத லுண்டோ

---

* ஏனவர் - மற்றவர்.

மாடு - பக்கம். இடங்கர் - முதலை. வலித்தல் - இழுத்தல். கோடு - சங்கு. கொற்றம் - வெற்றி. கொற்றவன் - வெற்றியுடையவன். கூய - கூவிய - ஓலமிட்ட (கந்தபு. மாகாளர். கூ)—த. அ. ஓர் - ஒப்பற்ற. பாடு - பெருமை. பயம் - பயன் - பலம் - பலன். வீடு - விடுதலை; முத்தி. விலங்கு - மிருகம். அது, பகுதிப்பொருள் விகுதி.

முதலைவாய்ப் பிடியினின்றும் பிறவிக்கட்டினின்றும் ஒருங்கே விடுதலை பெற்ற என்ற இருபொருள்பட 'வீடுபெற்ற' என இரட்டுற மொழிந்த நயம் நோக்கத்தக்கது.

'கஜேந்திராழ்வான் போல நீ உருவத்தால் மிருகமானாலும், உணர்வால் மனுடனாதலால், மிருகச்செயல் (தம்பி மனைவியைச் சேர்தல்) செய்தது தவ' றென்பது குறிப்பு.

பாட பேதம் : விலங்கரோ. (சங)

'தீமை நன்மை தெரியாமை மிருக இயல்' என்றல்

**44.** நன்று தீதென் றியறெரி நல்லறி
வின்றி வாழ்வதன் றோவிலங் கின்னியல்
நின்ற நன்னெறி நீயறி யாநெறி
ஒன்று மின்மையுன் வாய்மை யுணர்த்துமால்

கொண்டுகூட்டு : 'விலங்கின் இயல், (இது) நன்று (இது) தீது என்று (அதனதன்) இயலைத் தெரி(கின்ற) நல் அறிவு இன்றி வாழ்வது அன்றோ ? (வழங்கா) நின்ற நல்நெறி(களுள்) நீ அறியாத நெறி ஒன்றும் இன்மை உன் வாய்மை உணர்த்தும்.

பொருள் : 'மிருக சுபாவமென்பது, இச்செயல் நல்லது இச் செயல் தீயதென்று அதனதன் தன்மையைப் பகுத்தறிகின்ற அறிவில்லாமல் உயிர் வாழ்வதன்றோ ? (அதற்கு மாறாக, உலகத்தில் வழங்கா) நின்ற நன்னெறிகளுக்குள்ளே நீ அறியாதது ஒன்றும் இல்லாமையை (நீ இப்போது விவகாரமாகக் கூறிய) உன் வாய்ச்சொற்களே தெரிவித்துவிட்டன. ('எல்லா நன்னெறிகளையுந் தெரிந்துவைத்தும் அவைகளுக்கு மாறாக நீ நடந்தது தவறே' யென்பது குறிப்பு).

இயல் - தன்மை - சுபாவம். விலங்கு - மிருகம். வாய்மை - வாக்கு—(திருவிளை. வெள்ளையானை 2.)—த. அ. - வாய் மொழி. ஆல், ஈற்றசை.

விலங்கின்னியல் என்பதில் னகர ஒற்று விரித்தல். 'விலங்கின்னிடை' என்ற பாடத்திற்கு 'மிருகங்கட்கு (மனிதரோடு) வேறுபாடு' என்பது முந்திய உரை.

பாட பேதம்: விலங்கின்னிடை. (சச)

**'விதி விலக் கறியாத மனிதர் மிருகங்களே;**
**விதிப்படி ஒழுகும் மிருகங்கள் தெய்வங்களே' எனல்**

**45.** தக்க வின்ன தகாதன வின்னவென்
றொக்க வுன்னல ராயி னுயர்ந்துள
மக்க ளும்விலங் கேமனு வின்னெறி
புக்க வேலவ் விலங்கும்புத் தேளிரே

**கொண்டுகூட்டு:** *'உயர்ந்து உள்ள மக்களும், இன்ன தக்க இன்ன தகாதன என்று, ஒக்க உன்னலராயின் விலங்கே. அவ் விலங்கும், மனுவின் நெறி புக்கவேல், புத்தேளிரே.*

பொருள்: *'மனிதர்களும், இன்னவை தகுதியானவை, இன்னவை தகாதவை யென்று பகுத்தறியாரானால், மிருகங்களுக் கொப்பானவர்களே. மிருகங்களும் சன்மார்க்கத்திற் பிரவேசித்தவைகளானால், தெய்வங்களுக்கொப்பானவைகளே.*

*தக்க, புக்க: அன்சாரியை பெறுத தக்கன புக்கன; இறந்தகால வினையாலணையும் பெயர்கள். இன்ன - இவை. ஒக்க - பொருந்த. உன்னல் - நினைதல். விலங்கு - மிருகம். புத்தேள் - தெய்வம்.*

*விலங்கும் மனிதரே என்பது இயல்பான முடிவு. அதுவே உயர்வு குறித்தற்குப் போதியதா யிருக்கவும், 'விலங்கும் மனிதரே' என்னது 'விலங்கும் புத்தேளிரே' என நனி உயர்த்திக் கூறி நன்னெறிச் சிறப்பை நயம்பட வற்புறுத்திய கவிசாதுரியம் பாராட்டற் பாலது.*

*விலங்கொடு மக்க ளனையர் இலங்குநூல்*
*கற்றாரோ டேனை யவர்*

*என்ற குறள் இங்குக் கருதத் தக்கது.*

*'மநு, வடசொல்; இது இங்கே அவனாற் செய்யப்பட்ட தரும சாஸ்திரத்தைக் குறித்தலால், கருத்தாவாகுபெயர். மனுவின்னெறி னகரமெய் விரித்தல். ஏல் - எனில்: மரூஉ. புத்தேளிர், இர் பலர்பால் விகுதி: கேளிர், மகளிர் என்ற இடங்களிற் போல'.*—வை. மு. கோ.

பாட பேதம்: *உன்னல ராகி.* (சரு)

'புண்ணியஞ்செய்து புண்ணியபலனை யடைந்தது போலப்,
பாவஞ்செய்து பாவபலனை யடைந்தாய்' என்லீ

[ 'நன்னெறியில் நின்று சிவபூசை செய்த புண்ணியபலனாக நாற்பெரும் பூதங்களின் வலிமையையும் ஒருசேர நண்ணினாய்; தீநெறியிற் புகுந்து தம்பியைக் கொல்ல முயன்று அவன் மனைவியைக் கவர்ந்து இல்லற மாண்பைக் கெடுத்த பாவபலனாக என் அம்புக் கிரையானாய்.' ]

## வாலி வத நியாயம்

தன்னை மறைந்து எய்தமைக்கு இராமனை வாலி காரணம் வினவுதல்

**46.** அவ்வுரை யமையக் கேட்ட வரிகுலத் தரசு மாண்ட
செவ்வியோ யனைய தாக செருக்களத் தெதிர்த்தெய் யாதே
வெவ்விய புளினு ரென்ன விலங்கியே மறைந்து வில்லால்
எவ்விய தென்னை யென்று னிலக்குவ னியம்ப லுற்றான்

கொண்டுகூட்டு: (இராமன் கூறிய) அவ் உரை அமையக் கேட்ட அரிகுலத்து அரசு, 'மாண்ட செவ்வியோய்! அனையது ஆக. (நீ) செருக்களத்து (என்னை) எதிர்த்து எய்யாது, வெவ்விய புளினர் என்ன, விலங்கி மறைந்து வில்லால் எவ்வியது என்னை?' என்றான். இலக்குவன் இயம்ப லுற்றான்.*

பொருள்: இராமன் கூறிய அந்த வார்த்தைகள் மனத்திற் பதியக் கேட்ட வாலி, 'நீ கூறியதை ஒப்புக்கொள்கிறேன். (யான் என் தம்பி மனைவியைக் கவர்ந்தது இல்லற முறைக்கு மாறானதென நியாயங் கூறிய நீ) போர்க்களத்திலே (பகுத்தறிவுடைமையால் மனிதனென்று நீ கூறிய) என்னை எதிர்த்தெய்யாமல், (வில்லற முறைக்கு விரோதமாக,) வெய்ய வேடர் (மிருகங்களை மறைந்து நின்று எய்தல்) போல, விலகி மறைந்து நின்று வில்லினால் அம்பு எய்தது என்ன நியாயத்தால்?' என்றான். இலக்குமணன் அதற்கு விடை கூறலுற்றான்.

உரை - வார்த்தை. அமைய - மனத்திற் பதிய: 'ஆசாற் சார்ந்தவை அமைவரக் கேட்டல்'.† அரி - குரங்கு. மாண்ட - மாட்சிமைப்பட்ட. செவ்வி - தன்மை. மாண்ட செவ்வியோய் - மாட்சிமைப்பட்ட தன்மை

* இதிலிருந்து 50-ம் பாட்டு இறுதியாக 'வாலி வத நியாயம்' என்ற தலைப்புடன் தனிச் சிறுநூலாக முன்னர் அச்சிடப்பட்டது. வதம் - கொலை.

† நன்னூல், சூத்திரம் - 41.

யுடையோனே. வெம்மையுடையோனை 'வெவ்வியோய்' என விளித்தல் போலச், செம்மை ( - நடுவுநிலைமை — **சிலப்.**) உடையோனைச் 'செவ்வி யோ' யென விளித்தா னெனலுமாம். அத்தன்மையுடையது என்னும் பொருளுடைய அன்னது, அற்று, அனையது என்பவை அது என்ற பொருள் பட வரும். ஆக - ஆகட்டும். அனையது ஆக - அது ஆகட்டும் - நீ கூறிய படியே ஆகட்டும்: காஞ்சிப்புராண முத்தீசப்படலம் கச-ம் பாட்டில் வரும் 'வார்த்தை யிற்பிறழ் வஞ்சியற் றுகெனா' என்பதிலுள்ள 'அற்றுக' என்பது போல, 'நீ சொல்லியதை நான் ஒப்புக்கொள்கிறேன்' என்ற பொருள்பட நின்றது. 'அனையதாக' என்பதற்கு 'அப்படியானால்' என்பது முந்திய உரை. செரு - போர். களம் - இடம். செருக்களம் - போர் (செய்யும்) இடம். வெவ்விய - கொடிய. புளிஞன் புளினன் என்பன, வேடன் என் னும் பொருளுடையவை. விலங்குதல் - விலகுதல். எவ்வுதல் - ஏவுதல் - செலுத்தல். தாவுதல் தவ்வுதலென வருதல்போல, ஏவுதல் எவ்வுதலென வந்தது. இப்படல முதற்பாட்டில் 'எவ்விடத் துணிந்து' என வருதல் காண்க. 'என்னை' என்பது வினாப்பொருளோடு இகழ்ச்சிப்பொருள் குறித்து நிற்றல் கவனிக்கத்தக்கது.

**பாட பேதம்:** உருத்தெய்யாதே: விலங்கினை. (சக)

## வாலிக்கு இலக்குமணன் விடையளித்தல்

**47.** முன்புநின் றம்பிவந்து சரண்புக முறையி லோயைத்
தென்புலத் துய்ப்ப னென்று செப்பினன் செருவி னீயும்
அன்பினை யுயிருக் காகி யடைக்கலம் யானு மென்பாய்
என்பது கருதி யண்ணன் மறைந்துநின் றெய்த தென்றான்

**கொண்டுகூட்டு:** 'அண்ணல் மறைந்து நின்று எய்தது, முன்பு நின் தம்பி வந்து சரண்புக, முறையிலோயைத் "தென்புலத்து உய்ப்பன்" என்று செப்பினன். செருவில் நீ உயிருக்கு அன்பினை ஆகி "யானும் அடைக் கலம்" என்பாய்; (ஆயின் அவ்வுரை நிறைவேறாது) என்பதைக் கருதி (யதால்)' என்றான்.

பொருள்: '**இராமன் உன்னை மறைந்துநின்றெய்தது எதனா லென்றால்,** முதலில் **உன் தம்பி அவனிடம் வந்து சரணமடைய,** (உன் னுயிருள்ளவரையும் அவனுயிர் ஆபத்துக்குள்ளாயிருப்ப தைக் காக்கும்பொருட்டு) உன்னை **"எமலோகத்துக் கனுப்புவே"** னென்று **அபயவாக்களித்தான்.** (அவ் வாக்கை நிறைவேற்றுவ தற்குப்) **போர்க்களத்தில்** (உனக் கெதிர்நின்று **பொருதால்,** உன்

உயிர் போம்படி நேரும்போது) நீ, உயிர்மீது ஆசையுடையவனாகி, (அதனைக் காத்தற்கு அவனிடம்) "சரணம்!" என்று சொல்வாய். (அப்படிச் சரணடைந்த உன்னைக் கொல்லுதல் கூடாது. கூடாதாகவே, உன்னைக் கொல்வதாகக் கூறிய வாக்கை நிறைவேற்றல் கூடாததாம்) என்பதைப் பரியாலோசனை செய்ததனால் என்று தெரிவாயாக' என்று விடைகூறினான் இலக்குமணன்.

'எய்தது,' 'கருதி' என்று முடிந்தது.

சரண் - சரணம் - அடைக்கலம். சரண்புகுதல் - அடைக்கலமடைதல். தென்புலம் - இயமலோகம். உய்த்தல் - அனுப்புதல். செரு - போர். அன்பினை - அன்புடையாய். அண்ணல் - அரசன்; தலைவன்; பெருமையிற் சிறந்தோன். 'உயிருக்கு அன்பினை ஆகி' யென இயைக்க. 'முறையிலோயை' என, 'முறையில்லாதவனான உன்னை' என்ற நெடுந்தொடரை ஒரே ஒருபதமாகச் சுருக்கமாகக் கூறிய இலக்கண நுணுக்கப் பிரயோக நயம், கூர்ந்து நோக்கிக் குதுகலிக்கத் தக்கது. 'யானும்' என்பதில் உள்ள உம்மை, 'உன் தம்பி தன்னுயிரைக் காக்க "அடைக்கலம்!" என்றதுபோல நீ உன்னுயிரைக் காக்க "அடைக்கலம்!" என்பா' யென்பது குறித்தது.

'உன்னைக் கொல்வதற்குக் காரணம், சரண மடைந்தவனும் குற்றமற்றவனுமான உன் தம்பியைக் காத்தலன்றி, அவன் மனைவியைக் கவர்ந்து அறமுறை திறம்பிய உனது தீயொழுக்கமுமா மெனத் தெரிவாயாக' வென்பான் 'முறையிலோயை' என்றா னென்க.

தான் மறைந்தெய்ததற் குரிய நியாயத்தை இராமன் கூறினானென, வான்மீகர் கூறியிருக்க, இலக்குமணன் கூறினானெனக், கம்பர் சாதுரியமாகக் கூறிய நாகரிக முறை கவனித்தற்குரியது.

பகைவனை எதிர்ந்து கொல்லாமல் மறைந்து கொல்லுதல், யுத்த தருமமன்றென நீதி நூல்கள் கூறுதற்கு மாறாக, இராமன் வாலியை மறைந்து நின்று கொன்றது குற்றமென்றும், அது வானச் சந்திரனுக் கேற்பட்ட மறுப்போல, ராமச்சந்திரனுக் கேற்பட்ட பரிகாரமில்லாத மறுவென்றுங் கூறுவதுண்டு. 'மன்னர்க்கு—முன்னஞ் சொல்லும்—துறைதிறம்பாமற் காக்கத் தோன்றினான்' *, 'அறத்துறை நிறுத்தவந்த இறை' † எனச் சிறப்பித்துக் கூறப்பெற்ற கதாநாயகனான இராமனது செயல்களெல்லாம் சிறந்தனவாக இருக்க, இச்செய லொன்றே, குற்றங் கூறுதற் கிடமா யிருக்கிறதென, இராமபத்தருள்ளேயே சிலரும், ஏனையோ ரெல்லாரும் கூறுவர்.

---

* இப்படலம் எச. † இப்படலம் கஙஉ.

வாலியை இராமன் மறைந்தெய்ததற்கு வான்மீக கம்ப ராமாயணங்க ளிரண்டினும் நியாயங்கள் விரிவாகக் கூறப்பட்டிருக்கின்றன. இருதிற நியாயங்களுக்கும் முக்கியாமிசங்களில் மிக்க பேதமுண்டு. கம்பராமாயண நியாயம் மேலே கூறப்பட்டது. வான்மீக நியாயம் வருமாறு :—

வாலி, தன்னை எய்ததற்காக இராமனைக் குற்றங் கூறும்போது, '"வேறொருவருடன் நான் போர்புரியும்போது இராமர் என்னை எதிர்க்க மாட்டார் என்று எண்ணினேன். நீர் தருமத்தை நிலைநிறுத்துவதாக வீண் கொடி கட்டிக்கொண்டு அதற்கு மாறாய் நடந்து பாவத் தொழிலைச் செய் கிறவ ரென்றும், புற்களால் மூடப்பட்ட பாழ்ங்கிணறு போல்பவ ரென்றும், .........சாம்பல் மூடிய நெருப்புப்போலத் தருமப் போர்வை போர்த்துத் திரியும் கொடியவ ரென்றும் இதுகாறும் நான் அறிந்திலேன்......... போரில் புறங்காண முடியாத என்னைக், குடித்து மயங்கித் தூங்குபவரைப் பாம்பு கடித்தாற்போல, நீர் மறைந்து நின்று கொன்றீர்..........நீர் செய்த காரியத்துக்குத் தகுந்த சமாதானம் சொல்ல வழிதேடும்" (என்று) சொல்லி விட்டு.........இராமருடைய முகத்தைப் பார்த்துக்கொண்டு மௌனமா யிருந்தான்.

' இராமர் அவனை நோக்கி, "நான் உம்மைக் கொன்றதன் காரணம், புராதனமாயுள்ள தருமத்தை விட்டுவிட்டு நீர் உம்முடைய தம்பியின் மனைவியைக் கவர்ந்துகொண்டீர் என்பதே.........நீர் செய்த காரியத்துக்கு இத்தண்டனை எவ்விதத்தாலும் தருமமே.........உமது பாபத்துக்குத் தக்க படி தருமானுசாரமாக நான் தண்டனை செய்தேன். ......மனிதர்கள்,...... மிருகங்களை வலைகளாலும் கயிறுகளாலும்......எதிர்ப்பட்டும் மறைந்து நின்றும் பிடிக்கிறார்கள். அவர்கள், அம்மிருகங்களைப் பயந்து ஓடும்பொழு தும், நம்பி நிற்கும்பொழுதும், சண்டையிடும்பொழுதும், பராக்காயிருக்கும் பொழுதும், குத்தியும் அடித்தும் கொல்லுகிறார்கள். அதற்குத் தோஷம் ஒன்றும் சொல்லப்படவில்லை......நீர் வானரஜாதியானதால் நீர் என்னுடன் போர்புரிந்தாலும் புரியாவிடினும் உம்மை நான் கொல்லுவதில் தோஷ மில்லை..........நீர் தருமம் இன்னதென் றுணராது, கோபத்தால், முன் னோர்களுடைய தருமத்தை அனுசரிக்கும் என்னைத் தூஷிக்கிறீர்" என்று சொன்னார்.' *

வான்மீகத்தில், இராமன் முதலில் வாலியை மனிதனைக்கொண்டு, ' நான் உம்மைக் கொன்றதன் காரணம் நீர் உம்முடைய தம்பி மனைவியைக் கவர்ந்துகொண்டீர் என்பதே' என்று, வாலி மனிதன் செய்யத் தகாததைச்

* வான்மீகராமாயணம், பண்டித நடேச சாஸ்திரி மொழிபெயர்ப்பு.

செய்தானென்று குற்றஞ்சார்த்திவிட்டுப், பின்பு அவ்வாலியையே மிருகமாகக்கொண்டு, 'நீர் வானர ஜாதியானதால் நீர் என்னுடன் போர்புரிந்தாலும் புரியாவிடினும் உம்மை நான் கொல்லுவதில் தோஷமில்லை' என்று கூறியிருப்பது, முன்பின் விரோதமாய் ஒப்புக்கொள்ளத் தகாததாகத் தோன்றுகின்றது.

கம்பராமாயணத்தில், வாலியை இராமன் மறைந்தெய்ததற்குக் கூறும் நியாயம், அவன் தம்பிக்களித்த வாக்கை நிறைவேற்றுதற்கு அவனை மறைந்து நின்று கொல்லுதல் இன்றியமையாததா யிருந்ததென்பது. இந்த நியாயமும், வாக்குத்தத்த நிறைவேற்றமாகிய ஒரு தருமத்துக்கு எதிரியை மறைந்து கொல்லாமையாகிய வேறொரு தருமம் பலியிடப்பட்டதாமெனக் குற்றங் கூறுதற் கிடமாயிருத்தலால், ஒப்புக்கொள்ளத்தகாததாகவே தோன்றுகிறது. (சஎ)

## வாலியை ராமன் மறைந்தெய்தது, தோற்றத்தில் தருமவிரோதமானதேயன்றி, உண்மையில் தருமாநுசாரமானதெனக் கவி குறிப்பாக உணர்த்தல்

கவிகுலத் தரசு மன்ன கட்டுரை கருத்திற் கொண்டான்
அவியுறு மனத்த னாகி யறத்திற னழியச் செய்யான்
புவியிடை யண்ண லென்ன வெண்ணினன் பொருந்த முன்னே
செவியுறு கேள்விச் செல்வன் சென்னியி னிறைஞ்சிச் சொன்னான்

கொண்டுகூட்டு: கவி குலத்து அரசு அன்ன கட்டுரையைக் (கேட்டுக்) கருத்தில் (வாங்கிக்) கொண்டான். முன்னே (ஆதி பகவன் இராமனாக அவதரித்திருக்கிறானென்ற) செவியுறு கேள்விச் செல்வ (முடையவ)ன் (ஆன அவன்) அண்ணல் புவியிடை அறத்திறன் அழிய (ஒன்றும்) செய்யான் என்னப் பொருந்த எண்ணினான். (எண்ணி) அவியுறும் மனத்தன் ஆகிச் சென்னியினால் இறைஞ்சிச் சொன்னான்.

பொருள்: வாலி, அந்தப் பொருள் பொதிந்த வார்த்தைகளை மனத்திற் கொண்டான். செவியுற்ற கேள்விச்செல்வத்தையுடையவனான அவன், இராமன் பூமியிலே அறத்தின் உறுதி அழியும்படி ஒன்றும் செய்யானென்று எண்ணினான். எண்ணி, மனம் அடங்கித் தலையால் வணங்கிப் பின்வருவதைச் சொன்னான்.

இதனில் அடக்கப்பட்டிருக்கிற புதை பொருள் புலப்படப் பெய்வன பெய்து நிரப்பி விரித்துரைக்கலாம். அவ் விரிவுரை வருமாறு:—

வாலி, (இலக்குமணன் கூறிய) அந்தப் பொருள் பொதிந்த வார்த்தைகளை(க் கேட்டு) மனத்தில் (வாங்கிக்)கொண்டான். (பூமியில், அதருமம் மேலிட்டுத் தருமம் தாழ்வுறுங் காலங்களில், முன்னையதைப் போக்கிப், பின்னையதைக் காத்து நிலைநிறுத்தும் பொருட்டு, நீதிபரனான ஆதிபகவன் அவதாரஞ் செய்வானென்றும், அவன் இந்தக்காலத்தில் இராமனாக அவதரித்திருக்கிறானென்றும் பெரியோர் சொல்ல,) முன்பு (அப் பெரியோர்பால் கல்வி கற்றபோது) கேட்ட கேள்விச் செல்வத்தையுடையவனான வாலி அத்தகைய இராமன் அறத்தின் உறுதி அழியும்படியான யாதொரு செயலும் செய்யானென் றெண்ணினான். (அப்படி எண்ணவே, சமாதானந் தோன்றச் சாந்தி அடைந்து) மனம் அடங்கி (அதனால் அகங்காரம் நீங்கி, அதனால் தற்போதம் கழன்று, அதனால் பரபோத மடைந்து — ஞானக்கண் பெற்று; அதனால் பகவானே இராமனாகித் தன் வினைக்குத் தக்க பலனளித்தானென்று தெரிந்து, அநியாயஞ் செய்தவனென்று இதுவரை தான் வணங்காதிகழ்ந்த இராமனுக்குச் சாட்டாங்க நமஸ்காரம் செய்யக் கருதியபடி செய்யச் சத்தியின்றித், தன்னெஞ்சை உருவிக்கொண்டிருந்த அம்பை மேற்கொண் டுருவாமல் பற்றிக்கொண்டிருந்த கைகளால் அஞ்சலி செய்யவும் அசக்தனாய்)த், தலையால் வணங்கிப், பின்வருவதனைச் சொல்வானானான்.

கவி - குரங்கு. குலம் - கூட்டம். அரசும் என்பதில் உம்மை இசைநிறை. கட்டுரை - பொருள் பொதிந்த சொல்—சிலப். அவிதல் - அடங்குதல்—புறநா. உறு, துணைவினை. அறத்திறன் - தருமத்தின் உறுதி நிலைமை. அண்ணல் - தலைவன்; கடவுள்—தி. அ. செவியுறுதல் - கேட்டல். சென்னியின் - தலையால். இறைஞ்சுதல் - வணங்குதல்.

'முன்னே செவியுறு கேள்விச் செல்வன், அண்ணல் புவியிடை அறத்திறன் அழியச் செய்யான் என்னப் பொருந்த எண்ணினன்; அவியுறும் மனத்தனாகிச் சென்னியின் இறைஞ்சிச் சொன்னான்' என இயைக்க.

உரையில் எடுத்துக்கூறப்பட்ட 'அஞ்சலி செய்யவும் அசக்தனாய்' என்றதனோடு, இதன்பின், வாலி, 'இளவல் தன்னை — வன்துணைத் தடக்கை நீட்டி வாங்கினன் தழுவி' * என வருவதும், அவன் அங்கதனை 'நெஞ்சிற் புல்வி' † என வருவதும் பொருந்தவில்லையே எனின், அச் செயல்கள் அம்புப் பிடிப்பை விட்டுவிடாமல், பூரணமாகவன்றி அரை குறையாக இயன்றமட்டிற் செய்யப்பட்டன அல்லது பாவனையாகச் செய்யப்பட்டனவென்பது, இறுதியில், 'கை அவன் நெகிழ்தலோடும் கடுங்கணை கால வாலி வெய்யமார் பகத்துள் தங்கா துருவி' ‡ என வருதலால் விசதமாம்.

---

* இப் படலம் கஙக. † இப் படலம் கஅசு. ‡ இப் படலம் கடுங.

பாட பேதம்: கவிகுலத்தரசு மன்னன்: என்ப தெண்ணினன் பொருந்தி: சென்னியை இறைஞ்சி.

கம்பர், கதையை நடத்திக்கொண்டுபோகையில், அநீதமாகத் தோன்றும் நிகழ்ச்சிகளுக்குத் தோன்ளுக் காரண முளவெனச் சூசிப்பித்துப்போவர். கைகேயி இராமனைக் காட்டுக்குப் போகச்செய்தபோது, நல்லா ளொருத்தி தீங்கிழைக்க நல்லா னொருவன் தீங்குக் குள்ளாம் அநீதத்துக்குத் தோன்ளுக் காரணம் உளதென

'வெவ்வினை யவள்தர விளைந்த தேயுமன்று
இவ்வினை யிவன் வயின் எய்தற் பாற்றுமன்று
எவ்வினை விளைந்ததோ எவர் எண்ணமோ?' *

என வசிட்டன்வாயிலாகக் குறிப்பித்தார். அதுபோல, இராமன் மறைந்தெய்ததற்குத் தோன்ளுக் காரணத்தை இந்தக் கவியில் வாலி வாயிலாகக் குறிப்பித்தார்.

இராமன் வாலியை மறைந்தெய்ததற்கு இலக்குமணன் கூறிய நியாயத்தை வாலி மனத்திற்கொண்டா னென்ருரன்றி, ஒப்புக்கொண்டா னென்ருரல்லர்: ஒப்புக்கொள்ளவில்லை யென்று கூறினருமல்லர். இலக்குமணன் கூறிய நியாயம், இதற்குமுந்திய கவியின் விசேடவுரையிற் கூறிய வாறு, அவன் சொற்படியே, ஒரு தருமத்தைக் காக்க மற்றொரு தருமத்தை அழித்ததா யிருத்தலன்றி, எதிர்த்தாரது பாதிப் பலம் பெறும் வரம் படைத்த வாலியை எதிர்ப்பவர், அவர் பலத்திற் பாதியும் தன் பலமுமுடைய அவனால் செயிக்கப்படுதல் திண்ணமாதலால், இராமன் வாலியை எதிராமல், வீர தருமத்துக்கு விரோதமாக, வஞ்சகமாக, மறைந்து நின்று அம்பெய்து கொன்ருனென்று குற்றங் கூறுதற் கிடமாயிருக்கின்றது. இந்த ஆட்சேபங் களுக் கிடமான நியாயமன்றி, வேறு தக்க நியாயம் உண்மையை உறுதியாகக் கொண்டே, கம்பர், தான் மறைந்தெய்த அம்புபட்டுச் சாய்ந்து கிடந்த வாலி எதிரே இராமன் போந்ததை 'மன்னர்க்கு முன்னம் சொல்லும் — துறைதிறம் பாமற் காக்கத் தோன்றினன் வந்து தோன்ற' என்று துணிந்து கெம்பீரமாகச் சொன்னர். தக்க நியாயம் இல்லையாயின், 'இராமன் வந்தான்' என விசேடணமின்றி, வெறுமனே சொல்லியிருப்பார். அவர் தகுதியாகக்கொண்ட நியாயம் யாதோவெனின், அது வருமாறு:—

வாலி, இராமனம்புபட்டு இரத்தம் மிகுந்து வடிந்து உடற் கருவிகளும் உளக் கருவிகளும் ஒடுங்கினவனுனன். அப்போது, முன் கூறியவாறு, பகவான் தருமரட்சண நிமித்தம் இராமனுக அவதரித்திருக்கிருனென்று

* க. ரா. சா. அயோத்தியா காண்டம் 66-ம் பாட்டு.

கேட்டிருந்தது நினைவிற்கு வர, 'இராமன் எது செய்யினும் அது தருமானு சாரமாயிருக்கும்' என்று எண்ணிக் கோபத்தைவிட்டுச் சமாதானமுற்றுத், தன்முனைப்பின்றி மனம் அடங்கத், தற்போதம்* கழன்று பரபோத† மடைந்து சீவன் முத்தனானான்.

தற்போதம் நீங்குதற்குமுன் நிகழும் நிகழ்ச்சியாகிய மனம் அடங்குதல் வாலிக்கு நிகழ்ந்த தென்பதை 'அவியுறும் மனத்தனாகி' என்றதனாற் பெற வைத்தார். தற்போதம் நீங்குவதற்குப் பின் நிகழும் நிகழ்ச்சியாகிய பர போதம் பெறுதலை அவன் உற்றா னென்பதைப், பின்னர் அவன் இராமனை நோக்கி 'ஆவிபோம் வேலைவாய் அறிவு‡தந் தருளினாய்' என்றா னென்ற தனாற் பெறவைத்தார். தற்போத நீக்கத்துக்கு முன் நிகழும் மன அடக்க மும் பின் நிகழும் பரபோதப் பேறும் நிகழ்ந்தமையைக் கூறியதனால், இரண் டுக்கும் இடையில் நிகழும் தற்போத நீக்க நிகழ்ச்சியைக் கூறாமலே பெற வைத்தார். பரபோதம் பெற்றவர் தேகத்தோ டிருக்கும்போது பிறவாநிலை யடைந்த சீவன்முத்த ரென்பது கூறவேண்டியதில்லை. ஆவி தேகத்தை விட்டுப் போகுமுன் சீவன்முத்தனான வாலி, ஆவி தேகத்தினின்று நீங்கிய போது, விதேகமுத்தனானா னென்பதை 'வாலி — அந்நிலை (- சீவன் முத்தனா யிருந்த நிலையைத்) துறந்து (- விட்டுத், தேகத்தினின்று நீங்கி, விதேக முத்தனாகி) வானின் அப்புறத் துலகன் (இந்திரலோகம் பிரமலோகம் முத லிய பதமுத்திகளுக்கு அப்பாற்பட்ட நிலையான பரமுத்தியடைந்தவன்) ஆனான்' என்றதனாற் பெறவைத்தார். அவன் அடைந்த முத்தி, பதமுத்தி யன்று, 'மோக்ஷம்' என்னும் வீடாகிய பரமுத்தியே யென்பதை அவன், 'வெற்றர செய்தி எம்பி வீட்டர செனக்கு விட்டான்' என்றா னென்றதனாலும், 'யார்க்கும் சான்றென நின்ற வீரன் தான் வந்து வீடு தந்தான்' என்றா னென்றதனாலும் வலியுறுத்தினார். இப்படலத்துக்கு 'வாலி மோக்ஷப் படலம்' § என்ற பெயருண்மை இங்கே கவனிக்கத் தக்கது.

---

* தற்போதம், தன்னறிவு, சீவபோதம், ஆன்மபோதம், ஆன்மஞானம், இக ஞானம், சிற்றறிவு என்பவை ஒருபொருட் பல்பெயர்.

† பரபோதம், தேவபோதம், பரஞானம், தத்துவஞானம், சிவஞானம், மெய்ஞ் ஞானம், மெய்யுணர்வு, கேவலவுணர்வு, பேரறிவு, ஞானதிருட்டி, ஞானக்கண் என்பவைகளும் ஒருபொருட் பல்பெயர்.

‡ இந்த அறிவுக்குத் தத்துவஞானம் என முந்திய உரைகாரர் பொருள் கூறி யிருத்தல் காண்க.

§ பண்டித சவரிராயர், பாலசரஸ்வதி கிருஷ்ணமாச்சாரியர் பதிப்பித்திருக்கிற கிஷ்கிந்தாகாண்டம், பக்கம் 46, அடிக்குறிப்பைப் பார்க்க.

மோட்ச பக்குவர்க்கு* முத்தி அளிக்க, மானுடச் சட்டை சாத்திக்† குருவா யெதிரே தோன்றி அனுக்கிரகஞ் செய்யும் பரம்பொருள்‡, (பின்பு, வாலி தன் மகன் அங்கதனுக்கு இராமனைச் சுட்டிக்காட்டித்,

'..................................................................................தன்னின்
மேலொரு பொருளும் இல்லா மெய்ப்பொருள் வில்லும் தாங்கிக்
கால்தரை தோய நின்று கண்ணுக்கும் எளியன் ஆனான்'

என்று கூறுமாறு) அவனுக் கெதிர்நின்ற இராமனாகத் தோன்றிச், சட்சு தீட்சை§யாக அருள் நோக்கம் அளிக்க, அடைந்த ஞான திருட்டியினால் அவன் நோக்கியபோது, தன்னை இராமன் மறைந்தெய்த செயல், உயிர்கள் செய்யும் வினைக்கும் வினைசெய் விதத்துக்கும் தக்கவாறு பலனூட்டும் பரம் பொருள் தருமானுசாரமாகச் செய்த நீதிச் செயலென்று அனுமானமாக வன்றிப் பிரத்தியட்சமாகத் தெரிந்தான்.

வாலியை இராமன் மறைந்தெய்தற்குரிய உண்மை நியாயம் ஒன்று உள தென ஊகித்து உணரும்படி விடப்பட்டதன்றிக், கூறப்படவில்லை. கூறப் படாததன் காரணம் யாதெனின், அந்த நியாயம் யாருக்குக் கூறப்பட வேண்டுமோ, அந்த வாலி, அதனை இக ஞான மட்டும் உள்ள வரை அறியா திருந்தானேயன்றிப் பரஞானம் படைத்தபோது அறிந்துகொண்டா னென்பது.

அந்த உண்மை நியாயம் இதுவென, அவன்போல ஞானதிருட்டி பெற்றாரன்றிப் பிற ரெவராலும் தெரிதலும் செப்புதலும் இயலாததென்பது இயம்ப வேண்டியதில்லை. ஆயினும், அது இன்ன தன்மையதா யிருக்கலா மென மனோபாவனை துணையாக ஊகிக்கலாம்.

உண்மை நியாயத்தை உணர்ந்தபோது, வாலி பின்வருமாறு கருதி யிருப்பான்:— 'பொருள் கொடுப்பவன், உயிருக்கு உறுதிசெய்யும் மருந் தைக் கேட்டாலும், இறுதி செய்யும் நஞ்சைக் கேட்டாலும், கடைக்காரன், பெற்ற பொருளுக்குப் பிரதியாகக் கேட்டதைக் கொடுத்தல் போலத், தவஞ் செய்பவன் நல்ல வரத்தைக் கேட்டாலும், தீயவரத்தைக் கேட்டாலும் அவ னுடைய உபாசனாமூர்த்தி கொடுக்கும். என் தவப்பலனாக, என்னை எதிர்த்தாரது பலத்திற் பாதி என்னைச் சேரவேண்டுமென்று வரங்கேட்டுப்

---

* மோட்ச பக்குவர் - மோட்ச மடையும் பக்குவ முற்றவர்.

† மானுடச் சட்டை சாத்தி - மனித வடிவங் கொண்டு.

‡ பரம்பொருள், மெய்ப்பொருள், செம்பொருள், பகாப்பொருள், சிவம், தெய்வம், பிரமம், கடவுள், கருத்தா, முதல்வன் என்பவை ஒருபொருள் குறித்தவை.

§ சட்சு தீட்சை - நயன தீட்சை - பார்வையால் உபதேசித்தல்.

பெற்றேன். எதிரிகள் பலத்திற் பாதியைப் பறித்துக்கொண்டு, அவர்களை அநியாயமாக வென்றுவிட வஞ்சகஞ் செய்த யான், என்னை எதிராமல் என் எதிரி எவனேனும் என்னைக் கொல்லலா மென்பதை ஊழ்வலியால்* உணர்ந்தேனில்லை.

'இரவிலும் பகலிலும் இறவாமலும், மனிதராலும் மிருகங்களாலும் மாளாமலும் வாழ்ந்திருக்க வரம்பெற்ற இரணியன், பகலும் இரவுமல்லாத சாயங்கால சமயத்தில், மனிதனும் மிருகமுமல்லாத நரசிங்கத்தால் இறந்து படுவதை எதிர்பாராதது போலவும், "நாங்கள் எவராலும் கொல்லப்படா திருக்க வேண்டும்" என்று வரம்பெற்ற சுந்தோபசுந்த ரிருவரும் ஒருவர் மற்றொருவரால் உயிரிழப்பதை முன்னறியாதது போலவும், என்னைக் கொல்வோன் என்னை எதிராமற் கொல்வா னென்பதை அறியும் எதிர்கால அறிவு இல்லாமற் போனேன்.

'இராவணாதி யிராக்கத சங்கார நிமித்தம் திருமால் இராமனாகவும் தேவர்கள் அவன் சேனைவீரராம் வானரராகவும் பிறந்திருக்கும் அவதார ரகசியங்களைக் கேள்வியால் அறிந்திருந்தபடி, யான், ராமசேனைத் தலைவனா யிருந்தும், என் வலி மிகுதியால் செவிப்பட்ட செய்தியைப் பொருட்படுத் தாமல், ஈசனும் ராசனுமான இராமனுக்கு எதிரியான இராவணனோடு கூடி அக்கினி சாட்சியாக நட்புரிமை கொண்டேன். இது இராமகாரிய மூலநாச முயற்சியாய், ஒருங்கே ஈசத்துரோகமும் ராசத்துரோகமும் ஆயிற்று. இதற்குப் பரிகாரம் கொலைத்தண்டமேயன்றி வேறு தண்டம் யாதுமின்று. அன்றியும் அரக்கரை அடக்க வல்ல ஆற்றல் அடைந்திருந்தும், அவ் அரக்க ரும் அவர் தலைவனான இராவணனும் உலகிற்கும் இராமனுக்கும் இழைத்து வந்த தீங்குகளைக் கண்டும் காணான்போலத் தடுக்காதிருந்தேன். இவ்வாறு, செய்யத்தகாத காரியத்தைச் செய்தும் செய்யத்தக்கதைச் செய்யாதும் தவறி னேன்.† இவை யான் செய்துள்ள தவறுகள். இனிச் செய்யக்கிடந்த தவறும் ஒன்று உண்டு. அது, ராம ராவண யுத்தத்தில் நான் சத்தியந் தவறுமைப் பொருட்டு இராவணன் பக்கம் நின்று இராமனுடன் போர் புரிதல்; அன்றேல் சத்தியந் தவறுதல்: இவ்விரண்டுள் ஒன்று.

'உயிர்கள் செய்யும் வினைக்குத் தக்க பலனைத், தக்க காலத்தில், தக்க இடத்தில் தக்கார் வாயிலாக வினைச்சட்டத்தின்படி ‡ அடையச்செய்யும்

---

* ஊழிற் பெருவலி யாஉள மற்றொன்று
சூழினும் தான்முந் துறும். — குறள்

† செய்தக்க அல்ல செயக்கெடும் செய்தக்க
செய்யாமை யானும் கெடும். — குறள்

‡ வினைச்சட்டம் (Law of Karma), கருமபல நியதி, தருமசக்கரம், தேவாக் கினை, கடவுளாணை, 'இருவினைப்பயன் சென்றடைதற் கேதுவாகிய நியதி' (குறள் உரை) ஆகிய ஊழ், விதி என்பவை ஒருபொருள் குறித்தவை.

நீதி ரூபமாகத்* தன்னை வெளிப்படுத்தும் பரம்பொருள், என்னை என் வினைப்பயனை அடைவிக்க, ஊர்க் காவற்காரன் வேடமாறிக் கள்ளனைக் கள்ளவழியாகப் பிடித்தல்போல, என்னை இராமனாகி மறைந்துநின்று கொன்று நீதிசெலுத்தியதென்று அப் பரம்பொருள் அளித்த ஞானக்கண் கொண்டு கண்டறிந்தேன்.

'யான் நேரல்லாததைச் செய்துவிட்டு நேரல்லாத தண்டனை யடைந்தது நியாயமன்றென்றும், தருமத்துக்கு விரோதமாக நடந்து விட்டுத் தரும விரோதமாகக் கொல்லப்பட்டது தவறென்றும் கருதியது மடமையே. உலக ஒழுங்குக்கு மாறாக நடப்பவர்களுக்கு உலக ஒழுங்குக்கு மாறான தண்டனை உரியதே. மிருகம்போல நடந்த யான் மிருகம்போலக் கொல்லப்பட்டதற்கு, மிருகம்போலக் குறைகூறுமையே முறையானதாம்.

'யான் என் வலிமை காரணமாக மெலியாரை வருத்திய பாபபலனைக் கொலையுண் டனுபவித்தல் பிராயச்சித்தமாகப் பாபவிமோசனம் பெறவும், என் வலிமை மிகுதியால் மேலுமேலும் பிறரை வருத்தி மிக்க பாபம் ஈட்டு வேனா யிருந்தேனைத் தடுத்தாட்கொள்ளவும், எம்பெருமான் செய்த செயல், தேகச் சேமநிமித்தம் தேகத்தில் ஒரு பாகத்தைச் சேதிக்கும் சத்திரிகர்† செயல்போல, என ஆன்மாவை இரட்சித்தற்கு என் தேகத்தை அழித்ததா யுள்ள அருட்செயலே. ஒவ்வொரு விதிக்கும் விலக்குண்டு.‡ ஒரு வீரனை மற்றொரு வீரன் மறைந்தெய்வது அதருமமென்னும் விதிக்கு விலக்கு, இராமன் என் திறத்தில் இயற்றிய செயலாம். ஒருவன் தற்கொலை செய்தற்குச் சாதகமாகக் கருதி வைத்திருந்த நச்சுநீர்ப் பாத்திரத்தில் வேறொருவன் களவாக அந்நீரைக் கொட்டிவிட்டு நன்னீரைப் பெய்து வைத்தல் களவாகாததுபோலவும், ஒருவன் அநியாயமாகச் சாவாமல் தடுப்பதற்குச் சாற்றிய பொய் பொய்யாகாதது போலவும், இராமன் மறைந்து நின்றது வஞ்சகமாகாது; கொன்றது கொலையாகாது; இரண்டு செயல்களும் இரட்சகச் செயல்களே.'

இவ்வாறு, ஞானக்கண்கொண்டு கண்டு வாலி கருதியதாகக் கொண்டால், இராமன் மன்னர் முறைக்கு மாறாக மறைந்தெய்த செயல் இகழத்தக்க குற்றச்செய லாகாமல் புகழத்தக்க குணச்செயலாம்.

தனக்கு உதவிசெய்யும் சத்தி சற்றுமில்லாத சிசுவினைக் கொலைபுரிதல் மாபாதகத்துள் மாபாதகமென்பது தெளிவு. அந்தச் சிசுக்கொலையும்

---

* இப்படலம் கஉடு-ல் 'உண்டெனும் தருமமே உருவமா உடையநிற்—கண்டனன்' என வாலி கூறுதல் காண்க.

† சத்திரம் - ரணவைத்தியம். சத்திரிகர் - ரணவைத்தியர்.

‡ 'Every rule has its exception.'

அதனைப் பத்துமாதம் வயிற்றுள்வைத்து வளர்த்த மாதாவாலேயே செய்யப் படுமாறால், அதனை என்னென்பது! அப்படிப்பட்ட — நினையவே நெஞ்சு திடுக் கிட்டு நடுக்குற்றிடச்செய்யும் — கோரமான பாதகச் செயலைச் செய்தாள் பாரத கதாவீரர் குலமுதல்வனான சந்தனு மகாராசனுக்குத் தருமபத்தினி யானவள். அவள் செய்த சிசுவதை இராமன் செய்த வாலிவதை சம்பந்த மான காரண காரியத் தொடர்ச்சி முறையை விளக்குவதா யிருத்தலினால், அவ் வதை எவ்விதம் நிகழ்ந்ததென்ற வரலாற்றின் சுருக்கம்* இங்கே தரப் படுகின்றது :—

சந்தனு மகாராசன் ஒரு நாள் வேட்டையாடியபோது, தாகம் அதிகப் பட, அதனைத் தணித்தற்குக் கங்கைக்கரையை அடைந்தான். அங்கே, பேரழகுடைய மாதரசி ஒருத்தியைக் கண்டு, தாகம் தவிர்ந்து மோகம் மிகுந்து, அவளை அடைந்து, ‘நீ கன்னிகை யென்னில், என்னிலும் தன்னிய னில்லை’ என, அவள், ‘ஆம், நான் கன்னிகையே; ஆயின், கண்டவர் நடு நடுங்க நான் யாதியாது தீதுசெய்யினும் நீ பொறுப்பையேல், உன் மனைவி யாக இருப்பேன்; எப்பொழுது பொறுப்பதை மறுப்பையோ, அப்பொழுது பிரிவேன். இது என் பிரதிக்கினை’ என, அதற்கு இசையாவிடில் உயிர் போய்விடுமென்று இசைந்து, அவன் அவளைக் கலியாணஞ் செய்து கொண்டான்.

அவள், தலைப்பிள்ளை பெற்றவுடன், அதனைத் தண்ணீருள் முழுகு வித்துச் சாவச்செய்தாள். அதன்பின் உற்பவித்த ஆறு குழவிகளையும் அதே கதி அடையச்செய்தாள். சந்தனு, எட்டாம் குழந்தை சனனமான வுடனே, அதனைத் தாய் கைப்பற்றுமுன், தான் கைப்பற்றி, ‘இந்த மகனை எனக்கு ஈந்து என் குலத்தை நிலைக்கச் செய்தருள்வாயாக’ என்று பிரார்த் திக்கப், ‘பிரதிக்கினைப் பிரகாரம் பிரிவேன்’ என, ‘நீ ஆர்? ஏன் ஏழு குழந்தைகளையும் இறந்திடச்செய்தாய்?’ என, முன்னைய நிகழ்ச்சிகளை மொழிகின்றாள்:—

‘முன் ஒருசமயத்தில், பிரமசபைக்கு வந்திருந்தவர்களுள், பெருங் காற்று வீசக் கலைகுலைந்த கங்கையின் அங்கத்தைக் கண்ணுறுதபடி எல்லா ரும் கண்மூடிக்கொள்ள, ஒருவன் காமுற்று நோக்கினான். பிரமன், கோபித்து, “வருணதேவ, மண்மீது வேந்தனாகப் பிறந்து வேண்டுமளவு காமநுகர்ந்து மீண்டு வருக” எனச் சபித்து, அவன் மனைவியான கங் கையைக் “குற்றமற்ற நீ, மனிதப் பிறப்பெடுக்காமல், மனித வனிதை வடிவ மெடுத்து, அவன் காதல் தீர்தல்காறும் அவன் மனைவியாக வாழ்ந்து வரு வாயாக” என்றான்.

* விரிவை வில்லிபாரதம், குருகுலச் சருக்கம், ௬௩-௭௩-ல் பார்க்க.

'அவள் மண்ணுலகை நோக்கி வரும் வழியில், அவளை அஷ்டவசுக்கள் சந்தித்து வந்தித்து, "எங்கள் தலைவனது குழந்தைக்குப் பாலுக்காக, அவனும் அவன் கருத்துக் கிணங்கி மற்றெழுவரும் வசிட்ட முனியின் காமதேனுவைக் களவுசெய்ய, அம் முனிவன் முனிவுகூர்ந்து, '"நீங்கள் எண்மரும் மனிதராகப் பிறந்திடுக. தலைவன், களவுக்கும் தலைவனாயிருந்ததனால், மண்ணில் நெடுங்காலம் வாழ்ந்து மீண்டு வருக. ஏனை எழுவரும் பிறந்தவுடன் இறந்து திரும்புக"' என்று சபிக்க, அந்தச் சாபவசத்தினராய், மண் நோக்கிச் செல்கின்றோம்" என்றனர். அவள், தன் வரலாறு கூறி, "நீங்கள் எல்லீரும் என் வயிற்றில் உதித்திடுங்கள். தலைவன் தவிர, மற்றெழுவரும் மண்மீதுறுமுன் விண்மீதுறச் செய்வேன்" என்று கூறிப், பூமியை அடைந்து மானுட மடந்தை யானாள். அவளை நீ கங்கைக் கரையிற் சந்தித்தாய். அதன் பின் நிகழ்ந்தவை அனைத்தும் அறிவை.'

கங்கை தன் குழந்தைகளைக் கொன்ற ஒரு செயலே, சந்தனு, இவ்வுலக நிகழ்ச்சிகளை யறிந்தமைகொண்டு நோக்கியபோது இரக்கமற்ற தீச்செயலாகவும், மேலுலக நிகழ்ச்சிகளை யறிந்தமைகொண்டு நோக்கியபோது கருணை காரணமான நற்செயலாகவும் இருந்ததுபோல, இராமன் வாலியை மறைந்து நின்று கொன்ற ஒரு செயலே, வாலி இகலோக அறிவுகொண்டு நோக்கியபோது அதரும கிருத்தியமாகவும் பரலோக அறிவுகொண்டு நோக்கியபோது சுதரும கிருத்தியமாகவும் இருந்தது காண்க.

தன் குழந்தை உயிரைக் காக்கும் தலைமைக் கடமையுடைய தாயான கங்கை, தன் குடிகளின் உயிர்ப் பாதுகாப்பை முதற் கடனாகக் கொண்ட இராசனான இராமனுக்கும், இளமை காரணமாகத் தன்னைக் காக்கச் சத்தியற்ற குழந்தை, இராமன் மறைந்து நின்றமையால் தன்னைப் பாதுகாக்க முடியாதிருந்த வாலிக்கும், குழந்தை வதை வாலி வதைக்கும், உவமை. இனி, முற்பிறப்பறியுமுன் சந்தனுவுக்குக் கோரமான பாவமாயிருந்த கங்கை செயல், ஞானக்கண் பெறுமுன் வாலிக்கு வஞ்சகமும் வன்கண்மையுமாயிருந்த இராமன் செயலுக்கும், முன்பிறப்பு நிகழ்ச்சிகள் தெரிவிக்கப்பெற்றபின் கங்கைசெயல் நல்ல புண்ணியச் செயலென்று சந்தனு தெரிந்துகொண்டமை, ஞானக்கண் பெற்றபின் இராமன் செயல் பரிசுத்தமும் பரமகாருணியமுமான செயலென்று வாலி கண்டுகொண்டமைக்கும் உவமை. (சஅ)

### வாலி மன்னிப்பு வேண்டல்

49. தாயென வுயிர்க்கு நல்கித் தருமமுந் தகவுஞ் சால்பும்
நீயென நின்ற நம்பி நெடிதுநீ நோக்கு நோன்மை
நாயென நின்ற வெம்மா னவைபற வுணர லாமே
தீயன பொறுத்தி யென்றான் சிறியன சிந்தி யாதான்

கொண்டுகூட்டு: சிறியன சிந்தியாதான் (ஆன வாலி), 'தாய் என, உயிர்க்கு நல்கித், தருமமும் தகவும் சால்பும் நீ என நின்ற நம்பி! நீ நெடிது நோக்கும் நோன்மை * (இத்தகையது என்று) நாய் என நின்ற எம்மால் †, நவை அற உணரலாமே! (யான் செய்த) தீயன பொறுத்தி' என்ருன்.

பொருள்: (இராமனருளால் தத்துவஞானமென்னும் மெய் யுணர்வு பெற்றதனால், பரலோக சம்பந்தமான மகத்தான எண் ணங்களுடையவனாய், இகலோக சம்பந்தமான) அற்ப விஷய மானவைகளைப் பொருளாகக் கருதாதவனான வாலி, 'குழந்தைக் குத் தாய் அன்பு செய்தல் போல, உயிர்களுக்கு நீ அருள் செய்து, நீதியும் நடுநிலைமையும் எங்கும் நிறைவும் (ஆனவை வேறு நீ வேறென் றில்லாமல் அவை அனைத்தும்) நீயே யென்று சொல் லும்படி சருவ சாட்சியாய் நின்ற புருடோத்தமனே! பேரறி வுடைய நீ (நெடுங்காலத்துக்குமுன் செய்த வினைகள் நெடுங்காலத் துக்குப்பின் பலன் தருவதை முன்னும் பின்னுமாக) நெடுங்காலம் உள்பட நோக்கி (ஐயந் திரிபின்றி) அறியும் வல்லமை இப்படிப் பட்டதென நாய்போலக் கடைப்பட்டு நின்ற என்போலியரால் (அறியலாகாதது; அறிந்தாலும் ஐயந்திரிபாகிய) குற்றமில்லாமல் அறியமுடியாது. (அவ் வல்லமையை நீ கடாட்சித் தருளிய தத் துவஞானத்தால் யான் அடைந்து எல்லாந் தெரிந்து கொண் டேன். அதற்குமுன் அறியாமையால் யான் செய்த) குற்றங் களைப் (பகுத்தறிவில்லாத மிருகமான குரங்கு செய்த குற்றங் களாகக் கருதிப்) பொறுத்தருள்வாயாக' என்று கூறினன்.

'நல்கல்,' 'அருளல்' போலச், செயப்படுபொருள் குன்ருத வினை யாய்க் கொடுத்தற் பொருளை யுணர்த்தலன்றிச், செயப்படுபொருள் குன்றிய வினையாய் அருள்செய்தல் என்னும் பொருளை யுணர்த்தலும் உடையது. இங்கே நல்கலின் பொருள் அருள்செய்த லென்பது. தருமத்துக்குள்ள புண் ணியம் நீதி யென்ற இரு பொருள்களுள் நீதி, இங்கே பொருத்தமுடைய தாம். நீதிக்கு இன்றியமையாத நடுவு நிலைமை யென்னும் பொருளுடைய 'தகவு' அடுத்துக் கூறப்பட்டிருத்தல் காண்க. சால்பு - நிறைவு - எங்கும் நிறைந்திருத்தல் - சருவ வியாபகத்துவம். இறைவன் சருவ வியாபியா யிருந்து எங்கெங்கும் எவ்வெக்காலத்தும் நிகழும் உயிர்களின் செயல்களையும்

* 'நெடிதுநீ நோக்கும் நோன்மை' என்ற பாடம், சவரிராயர், கிருஷ்ணமாச் சாரியர் பதிப்பிற்கண்டது.

† 'எம்மால்' என்ற பாடம் வை. பதிப்பின் அடிக்குறிப்பில் உள்ளது.

அறியும் சருவ சாட்சியாய்ச், சாதாரண நீதிபதிகள் போலத் தனக்கு அந்நியமான சாட்சிகளின் உதவி வேண்டாமல், உண்மை அறிந்து, உயிர்கள் செய்த வினைக்குத் தக்க பலனை அடையச்செய்து நீதிசெலுத்துகிறு னென்பதைக் குறிப்பிக்கும் 'சால்பு' என்பதும் மேலே கூறியவாறு தருமத்துக்கு இங்கே நீதியென்ற பொருள் பொருத்தமான தென்பதை வலியுறுத்தல் காண்க. 'தருமமும் தகவும் சால்பும்' என்பதற்குத் 'தருமமும் நடுவு நிலைமையும் நற்குண நிறைவும்' என்பது முந்திய உரை. நம்பி - ஆடவரிற் சிறந்தோன். நெடிது - நெடுங்காலம்.—குறள் கூசஉ. நோன்மை - வலிமை - வல்லமை. நவை - குற்றம். 'நெறியினில் நோக்கும் நேர்மை' என்ற பாடத்துக்குக் (காரண காரியத் தொடர்ச்சி) முறைப்படி (இன்ன பயன் இன்ன வினையால் விளைந்ததென்று) காணும் நுட்பம் என்று பொருள் கூறலாம்.

இவ்வுலக நீதிபதியான இறைவன் (-அரசன்) இவ்வுலகிற் பிறந்தார்க்கு, அவர்கள் வாக்கினாலும் காயத்தினாலும் செய்யும் நன்மை தீமைகளுக்கு முறையே சம்மானமும் தண்டனையும் அளித்தல்போல, சருவலோக நியாயாதிபதியான இறைவன் (- கடவுள்) எவ்வுலகிற் பிறந்தாரும் வாக்குக் காயங்களாற் செய்யும் நன்மை தீமைகளுக்கேயன்றி மனத்தாற் செய்யும் நன்மை தீமைகளுக்கும் முறையே நற்பயன் தீப்பயன்களை அருள்பவன் என்பது போதர, 'தருமம் (-நீதி) நீ என நின்ற நம்பி' என்முனென்க.

ஊனக் கண்ணில்லார்க்கு அக்கினி காணப்படவில்லையானாலும் அதன் இயற்கைக் குணமான சூடு தெரிதல்போல, ஞானக்கண்ணில்லார்க்கு இறைவன் காணப்படாவிட்டாலும் அவன் இயற்கைக் குணமாய் அவன் ஆணையெனத்தக்க காரணகாரியத் தொடர்பு நியதி* தெரியலாவதாம். உயிர்கள் தாந்தாம் செய்யும் வினைகளுக்குரிய பலன்களை அடையும்படி இறைவன் செய்யும் நீதியாகிய கர்மபல நியதி யென்ற வினைச்சட்டம்† மேற்கூறிய காரியகாரணத் தொடர்பு நியதியு ளடங்கியது. இறைவன் குணமான நீதியை இறைவனென உபசரித்துக் கூறியதாகத், 'தருமம் நீயென நின்ற நம்பி' என்றதைக் கொள்ளலாம்.

வினைகளுள், கீரைவிதை போல விரைவிற் பலன் தருபவையும், பனைவிதை போல நெடுங்காலஞ்சென்று பயனளிப்பவையும் உள என்பர். அவ்விருவகை வினைகளுள் பிந்திய வினைகளின் விளைவுகளை அறிதல் பேரறிவாளர்க்கே இயலும் என்பது குறிக்க, 'நெடிது நீ நோக்கும் நோன்மை' என்முனென்க.

பாட பேதம்: நம்ப : நெறியினி னோக்கு நேர்மை: எம்பா லுணரலாமோ. (சுக)

 * Law of Causation. † Law of Karma.

## தத்துவஞானம் பெற்ற வாலி இராமனைத் துதித்தல்

**50.** ஏவுகூர் வாளியா லெய்துநா யடியனேன்
ஆவிபோம் வேலைவா யறிவுதந் தருளினாய்
மூவர்நீ முதல்வனீ முற்றுநீ மற்றுநீ
பாவநீ தருமநீ பகையுநீ யுறவுநீ

**கொண்டுகூட்டு:** *'ஏவு கூர் வாளியால் (என்னை) எய்து, நாய் (போலும்) அடியனேன் ஆவி போம் வேலைவாய், அறிவு தந்து அருளினாய்! மூவர் நீ! முதல்வன் நீ! முற்றும் நீ! மற்றும் நீ! தருமம் நீ! பாவம் நீ! உறவும் நீ! பகையும் நீ!*

**பொருள்:** *'அம்பினால் என்னை எய்து, அடியேன் ஆவி நீங்குந் தருணத்தில், எனக்குத் தத்துவ ஞானத்தைத் தந்தருளினாய்! (அதனால் என் வினைக்குத் தக்க பலனடையச் செய்தா யென்பதை அறிந்ததே யல்லாமல், பிரம விட்டுணு ருத்திரர் என்னும்) மூவரானவனும் நீயே என்பதையும், அம் மூவருள் முதல்வனானவனும் நீயே என்பதையும், அறியப்பட்ட பொருள்கள் அனைத்தும் நீயே என்பதையும், அறியப்படாத மற்றைப் பொருள்களும் நீயே என்பதையும், தருமமும் நீயே, அதருமமும் நீயே என்பதையும், சிநேகமும் நீயே, பகையும் நீயே என்பதையும் பிரத்தியக்ஷமாகத் தெரியலானேன்.*

*ஏவு கூர் வாளி - ஏவப்படும் கூரிய அம்பு. 'நாயடியனேன்' - 'நாய் போற் கடைப்பட்ட அடியேன்'; 'தன்னையுடையான் "எறிந்த வேல் மெய்யதாக வால் குழைக்கும் நாய்" போல், நீ எறிந்த வாளி மெய்யதாக அகங் குழையும் அடியேன்': இங்கு நாய், தாழ்மை நன்றியறிதல் இரண்டையும் குறிப்பதுமாம். 'அடியேன்' அன்சாரியை பெற்று 'அடியனேன்' என ஆகியது. வேலைவாய்; வாய் - ஏழனுருபு. அறிவு - பேரறிவு - தத்துவஞானம் - மெய்யுணர்வு. உறவு - சிநேகம்.*

*'பாவம் நீ தருமம் நீ' என்றும், 'பகையும் நீ உறவும் நீ' என்றும் ஒரு பொருளையே ஒன்றோடொன்று முரண்பட்ட இரண்டிரண்டெதிரிடைப் பொருள்களாகக் கூறியது, பரம்பொருளன்றிப் பாவமுமில்லை தருமமுமில்லை, பகையுமில்லை உறவுமில்லை யென்பது குறித்தது. இதன் உட்கோள் யாதெனின், அது வருமாறு:—*

*நஞ்சும் அமுதமும் தோன்றுதற் கிடமாயிருந்த பாற்கடல்போலப் பாவமும் புண்ணியமும் தோன்றுதற் கிடமாக உள்ளவன் இறைவன். முறை*

*தவறி முயன்றபோது விடத்தையும், முறையாக முயன்றபோது அமிழ்தத்தையும் தேவர்களுக்குத் திருப்பாற் கடல் கொடுத்தாற்போலச், சீவர்களுக்கு, இறைவன், அவர்கள் பாவஞ் செய்தபோது பாவபலனையும் புண்ணியஞ் செய்தபோது புண்ணிய பலனையும் தருதலால், (பின்னர், 'உண்டெனும் தருமமே உருவமா யுடையநிற் - கண்டனன்' என வாலி கூறுமாறு) அவனைத் தருமசொரூபி என்னும் நீதி வடிவினன் என்பர். 'இது தீச்செயல், இதற்குத் தண்டனை இது; இது நற்செயல், இதற்குச் சம்மானம் இது' என்று விதித்துத் தீச்செயல் செய்தார்க்குப் பகையாய் நற்செயல் செய்தார்க்கு நட்பாயிருக்கும் நீதியின் அமிசங்களாய்த் தீச்செயல் நற்செயல்களும் பகை நட்புக்களும் இருத்தல் போல, இறைவன் அமிசங்களாய்ப் பாவ புண்ணியங் களும் பகை நட்புக்களும் உள்ளன.* (ருo)

வாலி தான் பெற்ற நன்மைகளை உரைத்தல்

[ *'இராமமூர்த்தி! நீ எனக்கருளிய ஞானதிருட்டியினால், நீ யாவனென்றும் உன் தன்மை இது வென்றும் தெரிந்துகொண்டேன். அதனால் அரியவற்றுள் அரியதான முத்தியை எளியவற்றுள் எளியதாக எய்தினேன். காணப்படும் நீதி, காணப்படாத எப்பொருளின் இயற்கைக் குணமென்று உலகத்தார் அநுமானமாக அறிகிறார்களோ, அப்பொருளேயான உன்னை அந்த ஞானதிருட்டியால் யான் பிரத்தியட்சமாகக் காணலானேன். இந்தக் காட்சிக்கு ஏற்றமான காட்சி ஏதும் இல்லை. உன்னால் அநுக்கிரகிக்கப்பெற்றார் அடைவதும் முத்தியே; நிக்கிரகிக்கப்பட்டார் அடைவதும் முத்தியே. நிக்கிரக வாயிலாக எனக்கு முத்தி சித்திக்கச் சித்தம்வைத்தருளினாய்.*

*'என்னைக் கொல்ல, உன்னைக் கொணர்ந்த என் தம்பி, அநித்தியமான வெற்றரசைத் தான் அடைந்து, நித்தியமான வீட்டரசை யான் அடைய விட்டான். அவன் செய்த உதவியினும் சிறந்த உதவி யில்லை.* ]

வாலி இராமனிடம் வரம் வேண்டல்

**51.** ஓவிய வுருவ நாயே னுளதோன்று பேறுவ துன்பால்
பூவிய னறவ மாந்திப் புந்திவே றுற்ற போது
தீவினை யியற்று மேனு மெம்பிமேற் சீறி யென்மேல்
ஏவிய பகழி யென்னுங் கூற்றினை யேவ லென்றான்

கொண்டுகூட்டு: 'ஓவிய உருவ! நாயேன் உன்பால் பெறுவது ஒன்று உளது. எம்பி, பூ இயல் நறவம் மாந்தி புந்தி வேறு உற்றபோது, தீவினை இயற்றுமேனும், அவன்மேல் சீறி, என்மேல் ஏவிய பகழி என்னும் கூற்றினை ஏவல்' என்றான்.

பொருள்: (வாலி இராமனை நோக்கி) 'நாய்போலும் அடியேன் உன்பால் பெறும் வரம் ஒன்று உண்டு. அது யாதெனில், என் தம்பி, (இயல்பாக நற்குணமுடையவன். ஆயினும், அவன்) கள்ளைக் குடித்துப் புத்தி (சுபாவம்) மாறி மயங்கியபோது குற்றஞ் செய்வானானால், அவன்மேற் கோபித்து, என்மேலேவிய காலபாணத்தை ஏவாதிருப்பாயாக என்பது.' என்றான்.

ஓவியம் - சித்திரம். உருவம் - வடிவம். ஓவிய உருவ - சித்திர(த்தில் விளங்கும் சிறந்த வடிவம்போல அழகிய) வடிவமுடையானே! இயல் - பொருந்திய. நறவம் - மது - கள். மாந்தல் - குடித்தல். புந்தி - புத்தி. வேறுறல் - மாறுபடல். இயற்றும் - இயற்றுவான் - செய்வான். எம்பி - என் தம்பி. பகழி - அம்பு. காலன்போலத் தப்பாது கொல்லும் பாணத்தை, உரையில் காலபாணமென்றது, க. ரா. சா. பாலகாண்டம் 'எண்ணிலா' என்ற 37-ம் பாட்டில் வரும் 'காலவேல்' போல்வது.

'உளது ஒன்று பெறுவது உன்பால்' என்பதை 'உன்பால் பெறுவது ஒன்று உளது' என முழுதும் வரிசையாகப் பின்முன்னாக மாற்றுக. வசனநடைக்கு முற்றும் மாறாய், வார்த்தைகள் அனைத்தும் முறையாகப் பின்முன்னாக அமையப் பாடியுள்ள 'உளதொன்று பெறுவ துன்பால்' என்ற வாக்கியத்தின் சொற்கிடக்கை முறை வியந்து நோக்குதற் குரியது. சிறந்த செய்யுள் நடை, அதன் எளிமையும் தெளிவும் காரணமாக, செய்யுள் நடை யென்ற நினைவே எழாதவாறு நிகழ்தற்குச் செய்யு ளங்கமாயுள்ள இவ் வாக்கியம் ஏற்றதோர் உதாரணமாயிருத்தல் காண்க.

சீறி என்பது, 'எம்பிமேற் சீறி', 'என்மேற் சீறி' என இயைத்தற் குரித்தாக நிற்றல் கவனிக்கத்தக்கது. இப்படி நிற்பது, அலங்காரத்தில் நடுநிலைத் தீபகம் என்றும், பொருள்கோளில் தாப்பிசை என்றும், சூத்திரநிலையில் சிங்கநோக்கு என்றும் கூறப்படும்.

வாலி, தன்னைக் கொல்வித்த தம்பியை மன்னித்ததேயன்றி, வாளி துளைக்கும் மரண வேதனையினால் வருந்தும்போதும், மறதியுறாது, தம்பி நன்மையை நாடி வரம்வேண்டினானெனக், கன்னெஞ்சு படைத்தாரும் கனிந்துருகிக் கண்ணீர் சொரியும்படி, வாலியின் பேரன்பும் பெருந்தகைமையும் விளங்கக் கூறியிருக்கும் வித்தகக் கவிநயம் மிகவும் பாராட்டத்தக்கது.

(௫௧)

### இராவணனை வாலாற் பற்றிவந்து, இராமனிடம் ஏற்பியாமைக்கு இரங்கல்

[ *'யான், உனக்கு வேறு பேருதவி யாதெனினும் செய்யும் பெரும் பேறு பெற்றிலேனெனினும், வஞ்சக இராவணனை வாலினாற் சுற்றிப் பற்றிக்கொணர்ந்து பாதகாணிக்கையாக உன் திருமுன்னர் வைத்துக் குரங்கு செய்யக்கூடிய சிறுதொண்டு செய்யும் சிறு பேறும் பெற்றேனில்லை; செய்யாது கழிந்த செயலைப் பற்றிப் பேசலாற் பிரயோசனமில்லை. ஆதலின் இது நிற்க.*]

### அனும சுக்கிரீவர் ஆற்றல் சாற்றல்

[ *'இனி எந்தக் காரியமேனும் செய்யவேண்டிய தேற்பட்டால், அதனைச் செய்யத்தக்க அறிவும் ஆற்றலும் உடையன் அனுமன். சுக்கிரீவனும் அனுமனும் போன்ற துணைவர் வேறு யாருமிலர். இவர்களால் உனது தேவியைத் தேடி அடைந்து சிறப்புடன் வாழ்வாயாக!' என்று கூறினான்.* ]

### சுக்கிரீவனுக்கு நன்மதி கூறி, அவனும் சுற்றமும் இராமனுக்கு அடைக்கலம் எனல்

[ *பின்பு தம்பியை அருகில் அழைத்துத் தழுவி அணைத்து, 'உனக்கு உறுதியான தொன்றை உரைக்கின்றேன், உற்றுக்கேள்' என்றபோது, அண்ணனது அன்புமிகுதியை அறிந்து, அகம் மிக நெகிழ, ஆற்றொணாத் துக்கம் மிக்கு, அழுது வருந்தும் தம்பியை 'வருந்தாதே!' என்று வருத்தம் மாற்றி, 'வேதவேதாந்தங்கள், இதுவே முடிவான மெய்ப்பொருளென்று, துணிந்துகூறும் பரம் பொருளே, கோதண்ட ராமனாகத் தருமநெறியை நிலைபெறச் செய்ய, அவதரித்திருக்கிற தென்பதை அணுவளவும் ஐயமின்றி அறிவாயாக. என்னைப்போல நித்தமும் நேராகத் தீமையும், மறைவாக வஞ்சகமும் செய்தாரும், இவன் அம்பால் இறப்பரேல் ஈடும் எடுப்பு மில்லாத வீடு பெறுவரென்றால், உன்னைப்போலத் திருவடித் தொண்டு செய்வார் பெறும் பேற்றைப் பேசவேண்டுமோ? நீ தேடிப்போய் அடையவேண்டிய இறைவன் தான் தேடிவந்து உன்னை அடையப்பெற்றாய்! ஊழே உதவிடில், யாதே அரியது! நீ முன் செய்த தவப்பயனாக, ஈசனே ராசனாக இவனுக்கு அடியனாகி இருமைப்பயனையும் ஒருமிக்க அடைந்தாய். இவன்*

*காலாவிட்ட கட்டளைகளைத் தலையாற் செய்து, அபாயம் உற்றால் ஆருயிர்கொடுத்து உதவுவாயாக. நீ இராசனெனினும் இவனுக்கு அடிமை யென்பதை என்றும் மறவாயாக!' என்று நன்மதி கூறிய பின், இராமனை நோக்கி, 'இவனும் இவன் சுற்றமும் உனக்கு அடைக்கலம்' என்று கும்பிட்டுக் கூறினான்.* ]

அங்கதன் வாலியைக் காணல்

[ *பின்பு, தம்பியை நோக்கி, 'உன் செல்வச் சிறுவனை யிட்டுவா!' என, அவன் கொணர, அங்கதன் வந்தான்.* ]

சுடருடை மதிய மென்னத் தோன்றினன் றோன்றி யாண்டும்
இடருடை யுள்ளத் தோரை யெண்ணினு முணர்ந்தி லாதான்
மடலுடை நறுமென் சேக்கை மலையன்றி யுதிர வாரிக்
கடலிடைக் கிடந்த காதற் றாதையைக் கண்ணிற் கண்டான்

கொண்டுகூட்டு: *யாண்டும் இடர் உடை உள்ளத்தோரை எண்ணினும் உணர்ந்திலாதான் (ஆன அங்கதன்) சுடர் உடை மதியம் என்னத் தோன்றினன்; தோன்றி மடல் உடை நறுமென் (மலர்ச்) சேக்கை மலையன்றி, உதிர வாரிக் கடல் இடைக் கிடந்த காதல் தாதையைக் கண்ணில் கண்டான்.*

பொருள்: *துன்பமுடைய மனத்தினரை(க் கண்டறியாதவனாய்த், துன்புடையார் இப்படி யிருப்பரெனச் சொல்லக் கேட்ட போது, அவர்கள் நிலைமையை மனத்தினாற் பாவித்தறிய முயன்று, எண்ணி) எண்ணிப் பார்த்தாலும் தெரியமாட்டாத பாலப் பருவமுடையவன் ஆன வெண்ணிறமுடைய அங்கதன் ஒளியுடைய வெண்மதி வந்தாற்போல வந்தான். (அவன், சற்று முன்பு, சுக்கிரீவனோடு போர்புரியப் புறப்படுமுன் படுத்திருக்கப் பார்த்த) மலர்மெத்தை மலைமேலன்றி, இரத்தவெள்ளக் கடலுக்குள்ளே கிடந்த பிதாவைக் கண்டான். (அவன் பரிதாபநிலை பாவித்தற்பாலதன்றிப் பகரற்பாலதன் றென்றபடி).*

*சுடர் உடை மதியம் - ஒளி உடைய சந்திரன். யாண்டும் - எப்பொழுதும் - எக்காலத்தும். இடர் - துன்பம். உடை - உடைய. எண்ணினும் - எண்ணினாலும் - நினைத்தாலும். உணர்கிலாதான் - உணரமாட்டாதவன். மடல் - பூவிதழ். நறுமை - நன்மணம். சேக்கை - படுக்கை. உதிரம் - இரத்தம். வாரி - வெள்ளம் - பெருக்கு. காதல் – அன்பு. காதல் தாதை - தான் அன்பு வைத்திருக்கும் தந்தை; தன்பால் அன்பு வைத்திருக்கும் தந்தை.*

'இடருடை உள்ளத் தோரை எண்ணினும் உணர்ந்திலாதான்' என்பதற்குத் 'துன்பமுள்ள மனத்தையுடையவரை மனத்தினால் அறிந்துமிலாதவன்' என்பது முந்திய உரை.

தன்னோடு தொடர்பில்லாத பிறர் துன்பத்தை எண்ணிப்பார்க்க முயன்றாலும் அறியாத பாலப்பருவ மகலாத பச்சைப்பிள்ளை தன் பிதாவே மரண வேதனையுறும் நிலையிலே யிருக்கப் பார்த்தானென, நயம்பட, நடந்ததை நடந்தவாறு கூறும் தன்மைநவிற்சியாக, மிக்க இரக்கம் பிறக்க உரைத்த கவித்துவம் மிகவும் பாராட்டத் தக்கது.

தன்மைநவிற்சி, புனைந்துரை என்ற ஒன்றற்கொன் றெதிரிடையான இருவகை அலங்காரங்களுள் முன்னதைக் கொள்ளுவதும் பின்னதைத் தள்ளுவதும் தற்கால விற்பனர் பற்பலர் செயலாயிருப்பது நியாய மன்றென்பது நினைவுக்கு வந்ததனால், நயம்படக் கூறும் தன்மைநவிற்சி யெனப்பட்டது. நயம்படக் கூறாத தன்மைநவிற்சி அலங்காரமாகாது. நாற்காலிக்கு நாலு கால், நாய்க்கு ஒரு வால் என்பவை போன்றவை சுவையற்ற வெறுமையான தன்மைநவிற்சியாமன்றிச் சுவைபெற்ற அலங்காரத் தன்மைநவிற்சி ஆகாதென்பது கூறாமலே விளங்கும். உண்மைக் கவிகளாயுள்ளார் தன்மை நவிற்சி யலங்காரமாக உரைப்பதை உணர்வோர், 'இதிற் கூறப்பட்ட தன்மைநவிற்சியைத் தெரிந்திருக்கவேண்டிய நாம் இதுகாறும் தெரியாது போனோமே, இதனை அறிய எவ்வளவு இன்பமாயிருக்கிறது!' என எண்ணி, மனமுருகி மகிழுறுவர். அத்தகைய தன்மைநவிற்சி யலங்காரம் 'இடருடை உள்ளத்தோரை எண்ணினும் உணர்ந்திலாதான்' என்றதன்கண்ணே இனிதமைந்திருக்கின்றது. பாலப்பருவத்தில் துன்பம் அறியாமல் வளர்க்கப்பட்ட புத்தபகவான் போலத் துன்பம் அறியாத சிறு பிள்ளைகள், துன்புற்றோர் இப்படியிருப்பாரெனச் சொல்லக் கேட்டபோது, அதனைத் தெரிந்து கொள்ளமாட்டாமல் திகைக்குந் தன்மையை அதி உசிதமான அமையத்தில் அங்கதன்மேலேற்றிக் கூறிய அருமையான கவிசாதுரியம் ஆச்சரியமும் ஆனந்தமும் ஒருங்கு பயப்பதாயுள்ளது.

பாடபேதம்: மடருடை: கடரிடை. (ருஉ)

வாலி மீது அங்கதன் வீழ்தல்

[ சந்திரன் தரையில் வீழ்ந்து கிடக்க, அதன்மேல் நட்சத்திரம் வீழ்ந்ததுபோல, வாலிமீது அங்கதன் வீழ்ந்தான். ]

### 'இயமன் உன்னை அஞ்சாம லணுகினனே!' என்று அங்கதன் புலம்பல்

எந்தையே யெந்தையே யிவ்வெழுதிரை வளாகத் தியார்க்கும்
சிந்தையாற் செய்கை யாலோர் தீவினை செய்தி லாதாய்
நொந்தனை யதுதா னிற்க நின்முக நோக்கிக் கூற்றம்
வந்ததே யன்றே யஞ்சா தாரதன் வலிமை தீர்ப்பார்

கொண்டுகூட்டு: 'எந்தையே! எந்தையே! இவ் எழுதிரை வளாகத்தில் யார்க்கும் சிந்தையால் செய்கையால் ஓர் தீவினை செய்திலாதாய்! (அத்தகைய நீ) நொந்தனை! அதுதான் நிற்க, கூற்றம் நின் முகம் அஞ்சாது நோக்கி வந்ததே! அதன் வலிமை தீர்ப்பார் ஆர்?

பொருள்: 'என் ஐயாவே! என் ஐயாவே! இந்தப் பூமியிலே யாருக்கும் எண்ணத்தினாலும் (சொல்லினாலும்) செயலினாலும் ஒரு தீங்கும் செய்யாதவனே! (அப்படித் தீங்குசெய்யாத நீ, தீங்கு செய்யப்பட்டாய்! என்ன ஆச்சரியமான அநியாயம்! இதுகாறும் எதிரிகள் செய்த தீங்குகளால் — அவை உன்னை ஊறுபடுத்த மாட்டாமையால் — வருந்தினாயில்லை. அப்படிப்பட்ட நீ இப்போது ஊறுபட்டு) வருந்தினாய்! (என்ன பரிதாபமான ஆச்சரியம்!) வருந்தற்பாலனல்லாத நீ வருந்தின திருக்கட்டும். (நீ வருந்தினால் என்னை? வலியற்றுச் சாகக்கிடக்கும் புலியையும் ஆடு காண அஞ்சுமன்றோ! அதுபோல, இயமன், உன்னை நொந்த நிலையினும் காண அஞ்சுவானே! அவன், உன்னைக் காண்பது கிடக்க, உன் பேர் கேட்டாலும் அஞ்சினவன்தானே! அந்த) இயமன் உன் முகத்தை அஞ்சாமல் துணிந்து நோக்கினதன்றிக், கிட்டவும் வந்துவிட்டானே! (ஆ! முன் காலத்தில் உன் போல அவன் அஞ்சும் ஆற்றலுடையராய் வாழ்ந்த இரணியன், சூரபன்மன் முதலிய அநேகர் அந்தியகாலத்தில் அவனுக் கிரையாயின ரன்றோ!) அவன் வலிமையை ஒழிக்கவல்லார் யார்? ஒருவருமில்லை.

எந்தை - என் தந்தை. திரை - கடல். வளாகம் - இடம். எழு திரை வளாகம் - ஏழு கடல் சூழ்ந்த இடமாகிய பூமி. அது - நொந்தது. 'சிந்தையாற் செயலால்' என்றதனால் 'சொல்லால்' என்பது உபலக்கணமாக உரையில் வருவித்துக்கொள்ளப்பட்டது.

வாலி சுக்கிரீவனை நாட்டைவிட்டுத் துரத்தி அவன் சொத்துக்களையும் மனைவியையுங் கவர்ந்த தீய செயல்களை அங்கதன் அறிந்திருப்பா னன்றோ! அறிந்திருந்தும், 'யார்க்கும் — சிந்தையாற் செய்கையா லோர் தீவினை செய்திலாதாய்' என்ற தெதனு லென்றால், வாலியின் சார்பினர் மத்தியில் வாழ்ந்த அங்கதன், அவர்கள், தம்முள்ளே சுக்கிரீவன் துரத்துண்டு அவன் மனைவி கவரப்பட்டமைபற்றிப் பேசுங்கால், அச்செயல்கள், பகைவர் சொத்துக்களையும் அவர் மனைவியரையும் பறித்துக்கொள்ளல் தருமமாதலால், நியாயமானவை யெனக் கேட்டிருந்ததனு லென்க. (ருந)

## வாலியின் வால்வலி கூறல்

**54.** தறையடித் ததுபோற் றீராத் தகையவித் திசைக டாங்கும்
கறையடிக் கழிவு செய்த கண்டக னெஞ்ச முன்றன்
நிறையடிக் கோல வாலி னிலைமையை யுன்னுந் தோறும்
பறையடிக் கின்ற வந்தப் பயமறப் பறந்த தன்றே

கொண்டுகூட்டு: '(ஆணி) தறை யடித்தது போல், தீராத் தகைய(வாக) இத் திசைகளைத் தாங்கும் கறை அடிக்கு அழிவைச் செய்த கண்டகன் நெஞ்சம், உன் நிறை அடிக் கோலம் வாலின் நிலைமையை உன்னுந்தோறும் பறையடிக்கின்ற அந்தப் பயம் அற(வும்) பறந்ததே!

பொருள்: 'ஆணி தறையடிக்கப்பட்டது இடம்விட்டுப் பெயராதது போல (எட்டுத் திசைகளிலும் பூமியைத் தாங்கிக் கொண்டு நிற்கும் இடத்தினின்று) நீங்காத தன்மையுடையன வாக, இந்தப் பூமியின் எட்டுத் திசைகளையும் தாங்குகின்ற யானை களுக்குத் தோல்வியை உண்டாக்கிய இராவணனது நெஞ்சு, (அவனைச் சுற்றிக் கட்டித் துன்புறுத்திய) உன் வாலை நினைக்குந் தோறும் படபடவென்று பறையடிக்கும் பயம் முழுதும் இருந்த இடந் தெரியாமல் பறந்துபோய்விட்டதே!

'இந்த ஏடு எழுதினது, அந்த ஏடு எழுதாதது' என்பதில், 'எழுதினது'ம் 'எழுதாதது'ம் போலத், 'தறையடித்தது,' படுவிகுதி தொக்கு வந்தது. தீர்தல் - நீங்குதல் - நிலைபெயர்தல். தகை - தன்மை. கறை - உரல். கறை அடி - உரல்போலும் கால். கறையடி, அன்மொழித்தொகை யாய் உரல்போலும் காலையுடைய யானையை உணர்த்தியது. கண்டகம் - முள். கண்டகன், முள்போலத் தேவர்களுக்கு உபத்திரவஞ் செய்த

